# பாவாணர் கண்ட
# இன்றைய தமிழின் இலக்கணங்கள்

முனைவர் இரா. திருமுருகன்

International Institute of Tamil Studies

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை - 600 113.

பாவாணர் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர் - கொடையாளர் பலர்)

வரிசை எண்: 10 நாள்: 5-5-2003

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Pāvāṇar kaṇḍa i<u>nr</u>aiya tami<u>l</u>i<u>n</u> ilakkaṇaṅgaḷ |
| Author | : | Dr. R. Tirumurugan<br>Pondichery - 605 001<br>Tel: 0413-2201191 |
| General Editor | : | Dr. K. Subbiah Pillai |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113.<br>Phone : 2254 2992 |
| Publication No. | : | 448 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2003 |
| Paper Used | : | 18.6 kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | x + 102 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 30/- (Rupees Thirty only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road<br>Chennai - 600 004 |
| Subject | : | Grammar |

முனைவர் சா. **கிருட்டினமூர்த்தி**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

## அணிந்துரை

தனித்தமிழ் இயக்கத்தின் வேர்களில் ஆணிவேராகத் திகழ்ந்தவர் பாவாணர். தமிழ் திராவிட மொழிகளுக்கெல்லாம் தாய் என்பதைத் தன்னுடைய சொல்லாராய்ச்சி மூலம் நிறுவியவர்.

"சொல்லாராய்ச்சித் துறையில் தேவநேயப்பாவாணரே ஒப்பற்ற தனித்திறமையுடையவர் என்றும் அவருக்கு ஒப்பானவராக இருப்பது அருமையானது என்றும் யாம் உண்மையாகக் கருதுகிறேம்" என்று தனித்தமிழின் தந்தை மறைமலையடிகளார் அவர்கள் பாவாணரை வியந்து பாராட்டியுள்ளார்.

உலக முதன் மொழி தமிழே; திராவிட மொழிகளின் தாய்மொழி தமிழே; ஆரிய மொழிக்கு மூலமும் தமிழே என்பன பாவாணரின் மொழிக் கொள்கைகளாகும்.

மொழியின் தோற்றத்தையும் அதன் பயன்பாட்டு நிலையையும் பல நிலைகளிலும் இருந்து ஆராய்ச்சி செய்தவர் பாவாணர். மொழியின் செல்வங்களாகிய இலக்கியங்கள், இலக்கணங்கள் பற்றிய கருத்துகளை மிகத் தெளிவாகவும் அறுதியிட்டும் கூறுகின்ற மனப்பாங்கு பெற்றவர் பாவாணர். இவருடைய இலக்கண ஆய்வுக் கட்டுரைகள் அனைத்தும் புதிய இலக்கண நூலைப் படைப்பதற்குரிய தரவுகளைக் கொண்டுள்ளன. அவற்றை வெளிப்படுத்துவது தமிழுக்கு ஆக்கம் சேர்க்கும் ஒரு முயற்சியாகும். இன்றைய தமிழுக்குரிய இலக்கணம் எழுதப்பட வேண்டும் என்பதை அறிஞர்கள் பலரும் வற்புறுத்தி வருகின்றனர். ஒரு புதிய தமிழ் இலக்கணத்தைப் படைக்கும் நிலையில் பாவாணருடைய இலக்கணக் கருத்துகளையும், ஆய்வுக் குறிப்புகளையும் எளிதாக ஒதுக்கிவிட முடியாது. எனவே பாவாணர் கூறும் அனைத்து இலக்கணச் செய்திகளையும் வெளிக்கொணர வேண்டும்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் தேவநேயப்பாவாணர் பெயரில் அமைக்கப்பட்ட அறக்கட்டளையின் சார்பில் '**பாவாணர்**

**கண்ட இன்றைய தமிழ் இலக்கணங்கள்'** என்ற சொற்பொழிவை நிகழ்த்தப் புதுவைத் தமிழ் அறிஞர் முனைவர் இரா. திருமுருகன் அவர்களைக் கேட்டுக்கொண்ட நிலையில் அதற்கு அவர்கள் இசைவளித்தார்கள். பாவாணரின் இலக்கணச் செய்திகளை இன்றைய மாணவர்களும், ஆய்வாளர்களும், அறிஞர்களும் பயன்கொள்ளும் வகையில் மிகச் சிறப்பாக இச்சொற்பொழிவை அமைத்துத்தந்துள்ளார். இச்சொற்பொழிவை நிகழ்த்த இசைவு தந்த முனைவர் இரா. திருமுருகன் அவர்களுக்கு நிறுவனத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். 'பாவாணர் கண்ட இன்றைய தமிழ் இலக்கணங்கள்' என்ற பெயரில் இந்த நூலை இந்நிறுவனம் வெளியிடுவதைப் பாவாணருக்குச் செய்யும் சிறப்பாகக் கருதலாம். முனைவர் இரா. திருமுருகன் அவர்கள் ஒரு சிறந்த மரபிலக்கணி; இறையறிஞர். பாவாணர் மீது அளப்பரிய அன்பும், அவருடைய கொள்கைகளில் விடுதலறியாவிருப்பும் கொண்டவர். அத்தகைய பெருந்தகையாளரின் இந்நூல் தமிழ் உலகிற்கு, குறிப்பாகத் தமிழ் இலக்கணத்திற்கு ஒரு புதிய வரவாக அமையும் என்பதில் ஐயமில்லை.

இவ்வறக்கட்டளைச் சொற்பொழிவு நடைபெறுவதற்கும் நூல் சிறப்பாக வெளிவருவதற்கும் துணை புரிந்த அறக்கட்டளைப் பொறுப்பாளர் முனைவர் கு. சுப்பையா பிள்ளைக்கு நன்றியும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வியமைச்சர் செ. செம்மலை** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு– மற்றும் அறநிலையத்துறைச் **செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா, இ.ஆ.ப.,** அவர்களுக்கும், **கூடுதல் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும், என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலினை ஒளியச்சுக் கோப்புச் செய்த நிறுவனக் கணிப்பொறியாளர் ந. லட்சுமிக்கும் இந்நூலினை அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸுக்கும் நன்றி.

சென்னை இயக்குநர்

23-04-2003

# ஆசிரியரைப் பற்றி . . .



இவருடைய இயற்பெயர் இரா. சுப்பிரமணியன், திரு. அ. இராசு, திருமதி இரா. அரங்கநாயகி தம்பதியருக்குப் புதுவை மாநிலக் கூனிச்சம்பட்டு என்ற ஊரில் 16-03-1929இல் பிறந்தார்.

மதுரைத் தமிழ்ச் சங்கம் நடத்திய பண்டிதம் என்ற தேர்வில் 1950இல் தேர்ச்சி பெற்றதுடன், இதன் தொடர்ச்சியாக இசை, மொழியியல் சான்றிதழ்களையும், பிரஞ்சுமொழிப் பட்டயத்தையும், கலை முதுவர், கல்வி முதுவர் பட்டங்களையும், 1990இல் சென்னைப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டத்தையும் பெற்றார்.

பள்ளிகளுக்கான பாடநூல்கள், இலக்கணம், மொழி வளர்ச்சி, இலக்கியம், பாடல், இசை, வரலாறு என்ற தலைப்புகளில் 48 நூல்களை எழுதித் தமிழ்மொழி வளர்ச்சிக்குப் பெரும் தொண்டாற்றி வருகிறார். இலக்கணச் சுடர், இயலிசைச் செம்மல், முத்தமிழ்ச் சான்றோர், நல்லாசிரியர் (நடுவணரசு), மொழிப்போர் மறவர், சிற்றிசைச் செம்மல், பாவலர் அரிமா, தமிழ்க்காவலர், கலைச்செல்வம், பாவேந்தர் பைந்தமிழ்க் காவலர் ஆகிய சிறப்புப் பட்டங்களைப் பெற்றுள்ளார்.

தமிழக, புதுவை அரசுகளின் பல்வேறு குழுக்களிலும், சென்னைப் பல்கலைக்கழக இசைத்துறையின் பாடத் திட்டக்குழுவின் உறுப்பினராகவும், 'தெளி தமிழ்' என்ற தமிழ் வளர்ச்சித் திங்களிதழின் ஆசிரியராகவும், செவ்வியல் மொழிச் செயலாக்கக் குழுவின் தலைவராகவும் இருந்து வருகிறார். புதுவை மேனிலைப் பள்ளியில் துணை முதல்வராகப் பணியாற்றியதோடு சுமார் 44 ஆண்டுகள் அரசுப் பணியில் இருந்து ஓய்வு பெற்ற பின்னரும் தமிழ்மொழி வளர்ச்சிக்கு அருந்தொண்டாற்றி வருகிறார்.

இவர் பிரான்சு, செருமானி, ரோம், மலேசியா, சிங்கப்பூர், இலங்கை போன்ற நாடுகளுக்குச் சென்று தமிழ் மணம் பரப்பி அருந்தொண்டாற்றி உள்ளார்.

– கு. சுப்பையா பிள்ளை

# முன்னுரை

'கற்பவை கற்க' என்று திருவள்ளுவர் சொல்வதிலிருந்து, கற்கத் தகாத நூல்களும் உள என்பது பெறப்படுகிறது. 'மக்களே போல்வர் கயவர்' என்றபடி நல்ல நூல்களைப் போலவே தோன்றும் போலி நூல்களும் உள. அவற்றைப் படைக்கும் போலிப் புலவர்களும் உளர்.

காலங்காலமாகக் கட்டிக் காத்துவரும் மொழிவரம்புகளைப் பற்றிக் கவலைப்படாத அவர்களால் இன்று தமிழ்மொழி, சிதைவை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது.

அப்படியானால் கற்கத்தக்க பனுவல்களைப் படைத்த புலவர்கள் யாவர்? கற்பவர், மேல்வரிச் சட்டமாகப் பயன்படுத்த வேண்டிய நெறிகளைக் கூறும் நூல்கள் யாவை? என்பவற்றைத் தமிழ் மாணாக்கர் தெரிந்து கொள்ள வேண்டியது இன்றியமையாதது.

தேவநேயப் பாவாணர் உரைநடையிற் சிறந்தோராக மதிப்புடன் குறிப்பிடும் தமிழ்ச் சான்றோர்கள்: மறைமலையடிகள், மகிழ்நன், ந.மு. வேங்கடசாமி நாட்டார், கா. சுப்பிரமணிய பிள்ளை, திரு.வி.க., விபுலானந்த அடிகள், பண்டிதமணி கதிரேசச் செட்டியார், கி.வா. சகந்நாதன், செல்வக்கேசவராயர், மயிலைச் சீனிவேங்கடசாமி, ச. சோமசுந்தர பாரதியார், உவே. சாமிநாதையர், மயிலைச் சிவமுத்து, துடிசைக்கிழார் அ. சிதம்பரனார், தனிநாயக அடிகள், ஆறுமுக முதலியார், மு. வரதராசனார், சிதம்பரநாதன் செட்டியார், சேதுப்பிள்ளை முதலியோர்.

இத்தகையோர்தம் எழுத்துகளில் அமைந்துள்ளனவே உண்மைத் தமிழ் மரபுகள். அந்நூல்களைப் பயில்வோர்பால் நல்ல தமிழ் இலக்கண மரபுகள் தாமே படியும். அத்தகையோர்தம் எழுத்துகளிலிருந்து பாவாணரால் எடுத்துத் தொகுக்கப் பெற்ற புதிய தமிழ் மரபுகள் சில இந்நூலில் இன்றைய தமிழின் இலக்கணங்களாகத் தொகுக்கப் பெற்றுள்ளன.

இன்றைய தமிழ் உரைநடைக்கு முழுமையான இலக்கணம் படைக்கும் முயற்சி பலநாளாகவே இருந்துவருகிறது. அப்பணியில் பாவாணரின் பங்கை அறிந்துகொள்ள இந்நூல் பயன்படும் என்று நம்புகிறேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்கள். தேவநேயப் பாவாணர் அறக்கட்டளைச் சொற்பொழிவு குறித்த இவ்வரிய பணியினைச் செய்ய என்னை ஆளாக்கிக் கொண்டமைக்கு மிகவும் நன்றி.

‘ஏழிசைச்சூழல்’
62, மறைமலை அடிகள் சாலை
புதுச்சேரி - 605 001
பேசி: 0413-2201191

இரா. திருமுருகன்
4-4-2003

# உள்ளுறை

# குறுக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| இயற். இலக். | – | இயற்றமிழ் இலக்கணம் |
| உ.க.இ. | – | உயர்தரக் கட்டுரை இலக்கணம் |
| ஒ.மொ. | – | ஒப்பியன் மொழிநூல் |
| கட்.வ. | – | கட்டுரை வரைவியல் |
| சேனா. | – | சேனாவரையர் உரை |
| தொல். சொல். | – | தொல்காப்பியம், சொல்லதிகாரம் |
| தொல். பொருள். மரபு | – | தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல் |
| நன். | – | நன்னூல் |
| மேற். | – | மேற்கோள் |
| மொழி. | – | மொழி மரபு |

# பாவாணர் கண்ட இன்றைய தமிழின் இலக்கணங்கள்

## 1. இலக்கண உருவாக்கம்

தமிழ்மொழிக்குப் பேச்சுவடிவம் எழுத்துவடிவம் என இரண்டு வடிவங்கள் உண்டு. இவற்றில் பேச்சு வடிவம், வட்டாரந்தோறும் வேறுபடும் சிறப்பு வழக்குகளைக் கொண்டிருப்பதால், எல்லா வட்டாரத்தார்க்கும் இனிது விளங்காது. எனவே அது உலகத் தமிழர் அனைவரும் பொதுமொழியாகப் பயன்படுத்துவதற்கு உரியதாகாது. ஆனால் எழுத்துவடிவம் ஒரு படித்தானது. அது தமிழர் அனைவரும் எளிதில் விளங்கிக் கொள்ளவும், தம் கருத்துகளைச் சரியானபடி உணர்த்தவும், பிறர் கருத்துகளை உள்ளபடி உணரவும் பயன்படுவதாக உள்ளது. அதனை அதன் செம்மையான நிலையிலிருந்து சிதையாமல் போற்றிக் காக்க வேண்டியது மொழியறிஞர் கடமை. மொழியில் இன்று வரையில் உள்ள சான்றோர் வழக்குகள் இப்படி இருக்கின்றன என்றும், இனியும் இவற்றைப் போற்றிக் காக்க வேண்டும் என்றும் கூறுவதே இலக்கணம்.

எனினும், மொழியின் உயிர்வடிவம் பேச்சுவடிவமே. உயிருள்ள எதிலும் வளர்ச்சியும் மாற்றங்களும் நிகழ்ந்து கொண்டிருப்பது இயல்பே. பேச்சுமொழியில் வாணிகம், அறிவியல் முன்னேற்றம், பிறமொழியாளர் தொடர்பு முதலிய காரணங்களால், புதிய வழக்குகள் புகுதலும், பழைய வழக்குகள் கழிதலும் ஆகிய மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டேயிருக்கும் அத்தகைய புதிய வழக்குகள் சிலவற்றை இலக்கணம்

எடுத்துக்காட்டி, அவற்றுக்கு இடங்கொடுத்துப் போற்றாமல் விடுவதும் உண்டு. இவ்வழக்குகள் சிறிதுசிறிதாக உயர்ந்தோர் ஆட்சியில் இடம்பெற்று, மெல்ல மெல்ல எழுத்துத் தமிழில் நுழையும்போது இலக்கணம் அவற்றுக்கு இடந்தந்து வழுவமைதியாகக் கொள்வதும் உண்டு. இத்தகைய வழுவமைதிகள் நாளடைவில் வழாநிலையாக நிலைபெறுவதும் உண்டு. 'ஆசிரியன் வந்தான்' என்பதைப் பேச்சு மொழியில் உயர்வு கருதி 'ஆசிரியர் வந்தார்' என்பது வழுவே. கிளி சென்றது என்பதைக் 'கிளியார் சென்றார்' என்பது வழுவே. இவற்றைப் பெரியோர்களும் ஏற்று எழுத்துமொழியில்,

'பொங்கிய பேரழகுமிகு **புனிதவதியார் பிறந்தார்**'
*(பெரியபுராணம், காரைக்கால், 2)*

என்றும்,

செந்தார்ப் பசுங்**கிளியார் சென்றார்**க்கோர் இன்னுரைதான்
தந்தாரேல் தந்தார்என் இன்னுயிர் *(சீவகசிந்தாமணி, 1036)*

என்றும் வழங்கும் நிலை தொல்காப்பியர் காலத்திலும் இருந்திருக்க வேண்டும். அது கண்ட தொல்காப்பியர்,

ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய உயர்சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல *(தொல். சொல். 27)*

என்று கூறி அதனை வழுவமைதியாகக் கொண்டார். தொல்காப்பியர் காலத்தில் 'அது உண்டு' என்று ஒன்றன்பாற் படர்க்கையில் மட்டும் வழங்கிய 'உண்டு' என்ற குறிப்புவினைமுற்று, நன்னூலார் காலத்தில், 'அவன் உண்டு', 'அவள் உண்டு', 'அவர் உண்டு', 'அது உண்டு', 'அவை உண்டு' எனப் படர்க்கை ஐம்பால்களிலும், 'நான் உண்டு', 'நாம் உண்டு', 'நீ உண்டு', 'நீர் உண்டு' எனத் தன்மை முன்னிலை யொருமை பன்மைகளிலும் பொதுவாக வழங்கியது. ஆன்றோர் வழக்கிலும் இவ்வாட்சியைக் கண்ட நன்னூலார்,

வேறு இல்லை உண்டு ஐம்பால் மூவிடத்தன *(339)*

என இலக்கணஞ் செய்தார். எனவே ஒரு காலத்தில் வழுவாகக் கருதப்பட்டு விலக்கப்பட்ட வழக்குகளும், தொடர்ந்து பெரும் பான்மை மக்களாற் பயன்படுத்தப்பட்டுவரின், நாளடைவில் உயர்ந்தோரின் பேச்சு வழக்கிற் புகுந்து, அவர்தம் எழுத்து வழக்கிலும் இடம்பெறும். அப்போது அவற்றை வழாநிலையாக ஏற்று இலக்கணிகள் இலக்கணம் செய்வர். இக்கருத்தை,

கடி சொல் இல்லை காலத்துப் படினே *(தொல். சொல். 452)*

என்ற தொல்காப்பிய நூற்பாவுரையில் சேனாவரையர்,

*'இன்ன அனுமதிக்கும் காலமாம், அக்காலத்து, அவை*
*வழுவன்மை எல்லா ஆசிரியர்க்கும் உடம்பாடாகலின்*
*அதனைத் தழுவிக் கொண்ட வாறென்க'*

என்று கூறுகிறார். எத்தகைய வழக்காயினும் உயர்ந்தோரால் ஏற்றுக் கொள்ளப்பட்டால்தான் இலக்கணத்தில் இடம்பெறும். இதனை,

எப்பொருள் எச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே *(நன். 388)*

வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட் டாக லான *(தொல். பொ. மரபு. 93)*

என்னும் நூற்பாக்கள் தெளிவுபடுத்துகின்றன.

உயர்ந்தோர் செய்த இலக்கியங்களிலிருந்தே இலக்கணம் எடுக்கப்படுகிறது என்ற உண்மையை,

இலக்கணம் இன்றி இலக்கியம் இன்றே
எள்ளின் றாகில் எண்ணெயும் இன்றே
எள்ளினின் றெண்ணெய் எடுப்பது போல
இலக்கி யத்தினின் றெடுபடும் இலக்கணம்
*(பேரகத்தியத்திரட்டு. மேற். 1)*

இலக்கியம் கண்டதற் கிலக்கணம் இயம்பலின் *(நன். 141)*

ஆகிய நூற்பாக்கள் உணர்த்துகின்றன.

## இன்றுள்ள இலக்கண நூல்கள்

வரலாற்றுக் கெட்டாத தொல்பழங்காலத்தில் தோன்றிய தொல்காப்பியம் அன்றைய தமிழ்மொழியின் அமைப்புகளைக் கூறுகிறது. அதற்குப்பின் தோன்றிய வீரசோழியம், நேமிநாதம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம், அறுவகையிலக்கணம் முதலிய இலக்கண நூல்கள் பெரும்பாலும் தொல்காப்பியம் கூறிய இலக்கணங்களைத் தொகுத்தும் சுருக்கியும் வழிமொழிவனவாகவே உள்ளன. 13ஆம் நூற்றாண்டில் தோன்றிய நன்னூல் மட்டுமே தம் காலத்தில் இறந்துபோன வழக்குகளை விலக்கியும், புதியனவாகப் புகுந்த வழக்குகளைப் போற்றியும் இலக்கணம் செய்தது. எனினும், தொல்காப்பிய உரையாசிரியர்களும், நன்னூல் உரையாசிரியர்களும் சென்ற நூற்றாண்டுகளில் உரைநடையில் இலக்கணம் படைத்த ஆறுமுகநாவலர் முதலியோரும் தத்தம் காலத்தின் மொழி நிலையையும் கருத்தில் கொண்டு புதிய செய்திகள் பலவற்றை, நூற்பாக்களின் விதப்புக் கிளவிகளைக் கொண்டும், புறனடையாகவும் ஆங்கு ஈங்காகக் கூறியுள்ளனர்.

## பாவாணரும் இலக்கண உருவாக்கத்திற்கான அடிப்படைகளும்

> தமிழ்கூறும் நல்லுலகத்து
> வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
> எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்
> செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
> முந்து நூல்கண்டு முறைப்பட எண்ணிப்

புலந்தொகுத்தான் தொல்காப்பியன் என்று பனம்பாரனார் கூறுவர். இதிலிருந்து ஒருமொழியின் இலக்கணத்தை உருவாக்குவோர்க்கு என்னென்ன அடிப்படைகள் வேண்டும் என்பதை அறிந்து கொள்ளலாம். அம்மொழி வழங்கும் எல்லா இடங்களிலும் உள்ள உலக வழக்கையும் செய்யுள் வழக்குகளையும் அறிந்திருக்க வேண்டும். அம்மொழியில் உள்ள இலக்கண இலக்கியங்கள் அனைத்தையும் கற்றிருக்க வேண்டும்; அவற்றை முறைப்படி ஆய்ந்திருக்க வேண்டும்; அவற்றில்

அமைந்து கிடக்கும் மொழியின் இயல்புகளைத் திரட்டிப் பொதுமைப்படுத்தி விதிகள் செய்து தொகுக்க வேண்டும்.

இந்தத் தகுதிகள் பாவாணரிடம் மிகுதியாகவே இருந்தன. பாவாணர் நெல்லைப் பகுதியில் பிறந்து வளர்ந்தவர்; இளமைக் கல்வி கற்றவர்; இராசமன்னார்குடி, திருச்சிராப்பள்ளி, சேலம், அண்ணாமலைநகர் ஆகிய இடங்களில் பல ஆண்டுக்காலம் பணியாற்றியவர். அங்கெல்லாம் வாழ்ந்தபோது அப்பகுதி மக்களின் வட்டார வழக்குகளை நன்கு அறிந்தவர்.

தமிழ்மொழியிற் புலமை பெறும் ஆர்வங்கொண்டு, மதுரைத் தமிழ்ச் சங்கம் நடத்திய பண்டிதத்தேர்வுக்குப் பயின்று தேறியவர். தமிழ்நாட்டில் நடந்த புலவர், வித்துவான், முதுகலை முதலிய பல்வகைத் தமிழ்த் தேர்வுகளை விட மிகவும் கடினமான தமிழ் இலக்கண இலக்கியங்களை அத்தேர்வுக்குப் பாடமாக வைத்திருந்தனர். செய்யுளியற்றல் என்னும் வினாத்தாளும் அதில் இருந்தது. தமிழகத்திலும் யாழ்ப்பாணத்திலும் இத்தேர்வினை எழுதுவோர் பலபேராயிருந்தாலும், வெற்றி பெறுவோர் விரல்விட்டு எண்ணும் அளவினராகவே இருப்பர். பாவாணர் அத்தேர்வு எழுதிய ஆண்டில் அவர் ஒருவரே அதில் வெற்றி பெற்றார் என்றால் இதிலிருந்து அத்தேர்வின் கடுமையையும், பாவாணரின் நுண்மாண் நுழைபுலத்தையும், அறிவுத் திறனையும் அறிந்து கொள்ளலாம்.

பனிமலை உச்சியிலேறி வெற்றிக் கொடி நாட்டித் திரும்பியோர் திருவண்ணாமலையிலும் செஞ்சி மலையிலும் ஏறிக்காட்ட வேண்டியதில்லை. எனினும் பாவாணர் வித்துவான், புலவர், கீழ்க்கலைத்தேர்வு (B.O.L.), முதுகலை ஆகிய தேர்வுகளுக்கும் பயின்று எழுதிவென்றார். இதனால் அவர் இத்தேர்வுகளுக்குப் பாடமாக வைக்கப்பட்டிருந்த நூற்றுக் கணக்கான பாடநூல்களைப் பயிலவேண்டிய கட்டாயமிருந்தது. இது அவர்தம் தமிழறிவின் பரப்பினை அகற்றிக் கொள்ளும் வாய்ப்பாக அமைந்தது. இங்ஙனம் அவர் தமிழிலும் ஆங்கிலத்திலும் பெற்றிருந்த புலமை வளம் அவர்தம் மொழியாராய்ச்சிக்குத் துணை செய்தது.

மொழி ஆய்வில் ஈடுபட்டபோது தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு ஆகிய திராவிட மொழிகளையும், இந்தி, சமற்கிருதம், கிரேக்கம், இலத்தீனம், உருது, எபிரேயம், சப்பானியம் முதலிய மொழிகளையும் கற்க வேண்டியிருந்தது. இத்துணை நூல் அறிவோடு மதிநுட்பமும் உடைய பாவாணர்க்குத் தமிழ்மொழிக்கு இலக்கணம் எழுத வேறு என்ன தகுதி வேண்டும். இத்தகைய அவர் தமிழ்மொழியின் இயல்பு எனக் கண்டு எதைக் கூறினாலும் அது அதன் இலக்கணமாக அமைந்ததில் வியப்பில்லையன்றோ?

அவர் அவ்வப்போது மொழியாய்வுக் கட்டுரைகள் எழுதினார்; வடமொழி, தமிழ்மொழி வரலாறுகள் குறித்த நூல்கள் எழுதினார்; தமிழ் இலக்கிய வரலாறு படைத்தார்; திருக்குறளுக்கு உரை எழுதினார். மாணாக்கர்க்குப் பல ஆண்டுகள் தமிழ் கற்பித்தார். பல்கலைக்கழகத்தில் மொழியாய்வாளராகப் பணியாற்றினார். இவ்வளவு பரந்த பட்டறிவும் அவர்தம் நூல்களில் ஆங்காங்கே இன்றைய தமிழின் இயல்புகளாகக் கூறச் செய்தன. அவையே இக்கட்டுரையில் இன்றைய தமிழின் இலக்கணங்களாக எடுத்தெழுதப்படுகின்றன.

இன்றைய தமிழுக்கு இலக்கணம் எழுதுவதற்காகத் தமிழ்நாட்டரசு 1998இல் ஓர் இலக்கண வல்லுநர் குழுவை அமைத்தது. அக்குழு இன்று உலக முழுவதும் உள்ள தமிழ்க் கற்றறிவாளர்களின் எழுத்துத் தமிழின் இயல்புகளைத் திரட்ட வேண்டும். அத்தரவுகளைப் பொதுமைப்படுத்தி விதிகள் காணவேண்டும். ஏற்கெனவே பாவாணர் அவர்களுக்குப் பெருந்துணை செய்திருக்கிறார். இதுவரையில் வெளிவந்த எந்தத் தமிழிலக்கண நூலிலும் சொல்லாத புதிய இலக்கணச் செய்திகள் பலவற்றைப் பாவாணர் கூறியிருக்கிறார். அவற்றில் இன்றியமையாத சிலவற்றை இங்கே காணலாம்.

# 2. பாவாணர் கூறும் புதிய இலக்கணச் செய்திகள்

மொழிஞாயிறெனப் போற்றப் பெறும் தேவநேயப் பாவாணர் அற்றைத் தமிழின் நிலையையும் இற்றைத் தமிழின் இயல்பையும் நுனித்தாய்ந்து தம் நுழைபுலத்தால், இன்று தமிழ் கற்பார் அறிந்து கொள்ள வேண்டிய அரிய புதிய இலக்கணச் செய்திகள் பலவற்றைப் பற்பல நூல்களில் எழுதி விளக்கியுள்ளார். அவர் ஆக்கிய இலக்கணப் பனுவல்கள் பின்வருவன:

1. கட்டுரை வரைவியல்
2. இயற்றமிழ் இலக்கணம்
3. உயர்தரக் கட்டுரை இலக்கணம் - 1
4. உயர்தரக் கட்டுரை இலக்கணம் - 2

இவற்றுடன் தாம் அவ்வப்போது எழுதி வெளியிட்ட இலக்கண ஆய்வுக் கட்டுரைகளிலும், பதிப்பித்த இலக்கண நூல்களிலும் அடிக்குறிப்புகளாகப் புதிய இலக்கணச் செய்திகள் பலவற்றைக் கூறியுள்ளார். அவற்றுள் இன்றைய தமிழர் அறிந்துகொள்ள வேண்டிய, இன்றியமையாத செய்திகள் சிலவற்றை இங்கே காணலாம்.

## அ) எழுத்தியல்

### எழுத்துகளின் வடிவங்கள்

'தமிழ் எழுத்தில் இப்போது செய்ய வேண்டிய திருத்தம் இரண்டே, ஒன்று: 'ஈ'யை நீக்கி 'இ'யை வைத்துக் கொள்வது. இன்னொன்று: ஔகார உயிரிலும் அதனை ஏற்ற உயிர்மெய்களிலும் 'ள' வரியைச் சற்றுச் சிறிதாக்குவது. 'இ' வரிதான் முதலாவது இருந்தது; பின்பு இடைக்காலத்தில் அது விலக்கப்பட்டுக் கிரந்த வரியாகிய 'ஈ' புகுத்தப்பட்டது. ஔகார வரியில் உள்ள 'ள' வரியும் 'ஊ' வரியிற் போல் முதலாவது சிறிதாகவே இருந்து பிற்காலத்தில் தவறாகப் பெரிதாக எழுதப்பட்டது.

தமிழில் ஒரே உயிர்கொண்ட உயிர்மெய் வரிகளெல்லாம் ஓரியல் வடிவுகொண்டிருத்தல் வேண்டும் என்பது திருந்திய கருத்தன்று. எடுத்துக்காட்டாக ஐகார உயிர்மெய்களை எடுத்துக் கொள்ளின், அவை ஓரியல் வடிவு கொண்டிராமைக்குத் தகுந்த காரணம் உண்டு. 'ஙை' என்பதற்குப் பதிலாக 'னை' என்று எழுதின், கூட்டெழுத்தாய் எழுதுங் கையெழுத்தில் அது இரு னகரம் போல் தோன்றும். இம்மயக்கத்தை நீக்குதற்கே ஐகார உயிர்க்குறி, பல சுழிகளும் வளைவுகளும் கொண்ட எழுத்துகட்கெல்லாம் மேல் இடப்பெற்றுள்ளது. இங்ஙனமே ஆழ்ந்து நோக்கின், ஓரியல் வடிவு பெறாத பிற உயிர்மெய் வரிகட்கும் காரணம் தோன்றும். அச்சுவடிவு ஒன்றையே கவனித்துக் கையெழுத்து வடிவை நோக்காதவர்க்கே தமிழ் உயிர்மெய் வரிகள் ஒழுங்கில்லா தனவாகத் தோன்றலாம். கையெழுத்து முக்கியம்.

'ெ' என்னும் பழைய ஐகார உயிர்மெய்க் குறியை 'ை' என்று இணைத்தும், கு ஙு சு ஞு டு ணு முதலிய உயிர்மெய் வரிகளை ஒரே முறையில் வரையும் ஒற்றைக் குறியாகவும்

எழுதுவதெல்லாம் எளிமையும் தெளிவும் மட்டும் அன்று; காலச் சிக்கனமும் பற்றியதாகும். ஆதலால் எவ்வகையிலும் (மேற்காட்டிய இரு வரிகளையன்றி) மாற்றம் செய்யத் தேவையில்லை. புதிய எழுத்து மாற்றம் செய்தித்தாள்கட்கு இன்றியமையாததாயின், அவை மட்டும் அதை ஆளட்டும்; ஏனையோர்க்கு வேண்டா? என்று 'தமிழ் எழுத்து மாற்றம்' என்னும் கட்டுரையில் அவர் கூறுகின்றார் (செந்தமிழ்ச் செல்வி, நவம்பர் 1951).

(உகரவுயிர் மெய்கள் ஒத்த அமைப்பினவாய் இல்லாமல் கு,சு,து என்றும் ஊகார உயிர் மெய்கள் கூ, சூ, தூ, டூ என்றும் பல்வேறு வடிவுகளில் இருப்பதால் இவற்றில் ஒரு சீர்த்தன்மை வேண்டும் என்று இன்று சிலரால் எழுத்துச் சீர்திருத்தம் கூறப்படுகிறது. இதனைப் பாவாணர் ஏற்றுக் கொள்ளவில்லை என்பது மேற்கண்ட பகுதியால் தெரிகிறது).

## சில எழுத்துகளின் பெயர்கள்

பெரிய ணகரம், சின்ன னகரம், நண்டு நகரம், பலகை லகரம், குளம்பு ளகரம், மேல்நோக்கு லகரம், கீழ்நோக்கு ளகரம் என்றெல்லாம் இன்று பலவாறாகச் சொல்லப்படும் சில எழுத்துகளின் பெயர்களைப் பாவாணர் பின்வரும் பெயர்களால் குறிக்குமாறு கூறுகின்றார்.

| எழுத்து | பெயர் |
|---|---|
| ண | டண்ணகரம், முச்சுழிணகரம் |
| ந | தந்நகரம், மொழிமுதல் நகரம் |
| ன | றன்னகரம், இருசுழி னகரம் |
| ர | இடையின ரகரம், சின்ன ரகரம் |
| ற | வல்லின றகரம், பெரிய றகரம் |
| ல | சின்ன லகரம் |
| ழ | சிறப்புழகரம், பெரியழகரம், மகரழகரம் |
| ள | பொது ளகரம் |

பெரிய ரகரம், பெரிய ளகரம், என்று கூறுவது வழுவாகும் (கட்.வ.2).

## சில எழுத்துக்களின் ஒலிகள்

சில ஆங்கிலவழித் தமிழறிஞர் ஆங்கிலத்தில் உள்ள t போல ஒன்றுபட்டொலிக்கும் றகர விரட்டையைப் பிளவுபடத் திரித்துச்சரிப்பர். அது தவறு.

| எ.டு.: சொல் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| வெற்றி | vetri | vetti |

றகரம் னகர மெய்க்குப் பின்வரும்போது candle என்னும் ஆங்கிலச் சொல்லில் உள்ள d ஒத்தொலிக்கும்.

எ.டு.: கன்று kandu

வடசொற்களிலும் திசைச் சொற்களிலும் வருவது இடையின ரகரம். றகரம் தமிழுக்கே சிறப்பெழுத்தாதலின் பிறமொழிச் சொற்களில் வருபவை பெரும்பாலும் இடையின ரகரமே. கிறித்து, சீறாப்புராணம், உமறுப்புலவர் என்னும் சில திசைச் சொற்களில் மட்டும் வல்லின றகரம் வைத்தெழுதப்படும். பிற திசைச்சொற்களிலெல்லாம் அது வழுவாகும்.

| எ.டு.: பிழை | திருத்தம் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| று மசாமி(வ) | இராமசாமி | உறுமால்(இந்) | உருமால் |
| பிறு மணன்(வ) | பிராமணன் | குறுமா (இந்) | குருமா |
| அபறு தம்(வ) | அபராதம் | | |

(கட்.வ. 2, 3)

## சில சொற்களின் இறுதியில் றுகரம்

இணைக்குறில் மொழியல்லாத சொற்களிலெல்லாம் உகரவீறு ஏறிவருவது (அஃதாவது தனிநெடிற்குப் பின்னும், இரண்டு முதலிய பல எழுத்திற்குப் பின்னும் உகரம் ஏறிவருவது) வல்லினறகரம். எ.டு.: காறு, களிறு.

| எ.டு.: பிழை | திருத்தம் |
|---|---|
| ஊரு | ஊர் |
| குளிரு | குளிர் |

(கட்.வ. 2, 5)

## தற்பவத்திரிபு

வடசொற்களில் உள்ள த் ஸ் ல் என்னும் எழுத்துகள் தமிழில் திரியக் கூடியது வல்லின றகரமாகவே,

எ.டு.: உத்ஸவம் - உற்சவம், பஸ்பம் - பற்பம், அல்பம் - அற்பம் (கட்.வ. 5)

(பாவாணர் இவ்வாறு கூறுவதிலிருந்து, இன்று சிலர் பஸ்பம் என்பதைப் பசுபம் என்றும், பாஸ்கரன் என்பதைப் பாசுகரன் என்றும் எழுதுவதைப் பிழை என்று தெரிந்து கொள்ளலாம்.)

## ளகர ழகர வேறுபாடின்றி எழுதப்படும் சொற்கள்

சில சொற்கள் ளகர, ழகர வேறுபாடின்றி எழுதப்படும் அவையாவன:

| | | |
|---|---|---|
| இளிவு | - இழிவு | = நிந்தை |
| உளறு | - உழறு | = பிதற்று, நாத்தடுமாறு |
| குளறு | - குழறு | = நாத்தடுமாறு |
| சுளி | - சுழி | = முகங்கோணு, கோபி |
| துளாய் | - துழாய் | = துளசி |
| பவளம் | - பவழம் | |

மங்கலம் என்னும் சொல் மங்களம் என்றும் வழங்கும் (கட்.வ.16).

## வல்லின மெய் இறுதி அயற் சொற்கள்

அயற்சொற்களின் இறுதியில் வல்லின மெய்வரின் அதன் மேல் ஓர் உகரம் ஏற்றி எழுதப்படும். அப்பொழுது அவ்வல்லின மெய் இரட்டும்.

எ.டு.: விராட் - விராட்டு, சத் - சத்து (கட்.வ. 22)

(இதன்படி பேங்காக், குவைத், மூனிச், பானிப்பட் முதலிய பெயர்கள் முறையே பேங்காக்கு, குவைத்து, மூனிச்சு, பானிப்பட்டு என்று எழுதப்படல் வேண்டும் என்பதறியலாம்.)

## சில புதிய தொழிற்பெயர் விகுதிகள்

வழக்கமான தொழிற்பெயர் விகுதிகளுடன் பாவாணர் சில புதிய தொழிற்பெயர் விகுதிகளைப் பிரித்துக் காட்டுகிறார். வேறு இலக்கண நூல்களில் காணப்படாத அவை வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| வஞ்சனை | - அனை | வஞ்சகம் | - அகம் |
| கண்டனம் | - அனம் | விளம்பரம் | - அரம் |
| கட்டணம் | - அணம் | கண்ணியம் | - இயம் |
| கட்டடம் | - அடம் | சிரிப்பாணி | - பாணி |

*(இயற். இலக். 15)*

## காலம் காட்டும் தொழிற்பெயர்களின் விகுதிகள்

எல்லா வினைகளும் தல், கை, மை, து என்ற விகுதிகளை ஏற்கும். இவற்றுள் மை, து இரண்டும் காலம் காட்டும் தொழிற் பெயர் விகுதிகளாகும்.

எ.டு.: படித்தல் - தல் நடக்கை - கை
வந்தமை - மை சென்றது - து *(இயற். இலக். 15)*

## வினையின் பொருளை வேறுபடுத்தும் விகுதிகள்

ஒருவினை பல விகுதிகளை ஏற்பின், விகுதிதோறும் வேறு பொருள் தோன்றும்.

எ.டு.: கற்றல் - தல் = படிக்கும் தொழில்
கற்கை - கை = படிப்பு
கல்வி - வி = வித்தை (Education)
கலை - ஐ = சாத்திரம்
கற்பு - பு = மாதர் ஒழுக்கம்

## தொல்காப்பியம் ஏன் வடசொல்லைப் பற்றிக் கூற வேண்டும்?

'தமிழுக்கு வடமொழி உதவி வேண்டாதிருக்க வட சொல்லைப் பற்றி ஏன் தமிழிலக்கணத்திற் கூறவேண்டுமெனின், வடமொழி தமிழுக்கு இடத்தால் அணித்தாதலின் போக்கு வரவு

பற்றியும் மொழிபெயர்ப்புப் பற்றியும் வடமொழியில் உள்ள நூற் பெயர்களும், ஆட் பெயர்களுமாய்த் தமிழில் வந்து வழங்கிய சிறப்புப் பெயர்களே வடசொல் எனப்பட்டன என்றும், மொழி வழக்கிற்கும் கருத்தறிவிப்பிற்கும் வேண்டிய பிற பொதுச் சொற்கள் தமிழில் வந்து வழங்குமாறு கூறப்பட்டிலதென்றும், பண்டை நூல்களெல்லாம் வடமொழி விரவாத செந்தமிழ் நூல்கள் என்றும் கூறிவிடுக்க' *(இலக்கணக் கட்டுரைகள், 17).*

(பாவாணரின் இந்த விளக்கத்தினால், தொல்காப்பியர் செய்யுளில் இடம்பெறக் கூடிய சொற்களில் ஒன்றாக வடசொற்களையும் ஏற்றுக் கொண்டார் என்று கூறுவோர்க்கு, வடமொழிப் பொதுச் சொற்களின் துணை தமிழுக்கு வேண்டியதில்லை; வடபுலத்தைச் சேர்ந்த இடங்கள், ஆட்கள், நூல்கள் முதலியவற்றின் சிறப்புப் பெயர்களைத் தமிழில் தமிழ் ஒலிமரபுக்கு ஏற்றவாறு திரித்து எடுத்தாளலாம் என்பதைத் தெரிவிக்கவே வடசொல்லைப் பற்றிக் கூறினார் என்று விடை தரலாம்).

## காரன், காரி ஆகியன தென்சொற்களே

'காரன், காரி என்னும் உயர்திணைப் பெயர் ஈறுகள் உரிய வரை உணர்த்தும் தென்சொல்லேயன்றிச் செய்யப்படுவதை உணர்த்தும் வடசொல்லல்ல' *(இலக். கட். 55).*

(சென்னைப் பல்கலைக்கழக அகராதி காரன், காரி என்பன க்ஷார என்னும் வடசொல்லின் திரிபு என்று குறிப்பிடுகிறது. காரம் என்ற சொல் கடு என்னும் வினையின் திரிவான கரி என்னும் பகுதியடியாய்ப் பிறந்த தொழிற்பெயராய், வன்மை, அதிகாரம், வலி, எரிவு, வெம்மை, உறைப்பு, சினம் முதலிய கடும் பண்புகளை யெல்லாம் உணர்த்தும் தூய தென்சொல் என்று நிறுவிய பாவாணர் மேற்கண்டவாறு முடிபு கூறுகின்றார்.)

## எல்லா ஒலிகளையும் குறிக்க வரியுள்ள மொழி

எல்லா ஒலிகளையும் குறிக்க வரியுள்ள மொர்ழி உலகத்தில் ஒன்றுமேயில்லை. எ, ஒ, .ழ, ற என்ற ஒலிகள் வடமொழிக்கு

இல்லை. ஞ, ண, ழ, ள என்ற ஒலிகள் ஆங்கிலத்திற்கு இல்லை. ஆங்கிலத்தில் உள்ள f, z, zh முதலிய ஒலிகள் வடமொழிக்கு இல்லை. எனவே ஒரு மொழிச் சிறப்பெழுத்துச் சொற்களைப் பிறமொழியில் எழுதவொண்ணாது *(நெடுங்கணக்கு, செந்தமிழ்ச் செல்வி, நளி. 1934).*

(மேற்கண்ட உண்மையை யறிந்த வடமொழிவாணன் ஒருவன் ஒரு தமிழனை நோக்கி, " 'ஸகஸ்த்ர தளாம்புஜம்' என்பதைத் தமிழில் எழுதுக" என்று பழித்தானாம். அதற்குத் தமிழன் " 'வாழைப்பழ வற்றல்' என்று வடமொழியில் எழுதுக" என்று சொன்னதும் வடமொழியாளன் விழித்தானாம் என்ற செய்தியைக் கூறிப் பாவாணர் மேற்கண்ட உண்மையைக் கூறுகின்றார்.)

**பிறமொழிச் சிறப்பெழுத்துகளைத் தமிழில் எப்படி எழுதுவது?**

பிறமொழிச் சிறப்பெழுத்துகளைத் தமிழில் இயன்ற துணை தமிழ் வரிவடிவுகளாலேயே எழுதுதல் தகும். அதற்காகப் புத்தெழுத்துக்களைத் தமிழிற் புகுத்த வேண்டும் என்பது பொருந்தாக்கூற்றே *(நெடுங்கணக்கு, செந்தமிழ்ச் செல்வி, நளி, 1934).*

(Gokhale என்பதைக் கோகலே (Kogale) என்று தமிழன் ஒலித்ததைக் கேட்டு அரவிந்தர் கடகடவென்று சிரித்ததாகவும் அதனால் பிறமொழிச் சிறப்பெழுத்துகளுக்கான வரிவடிவங்கள் சிலவற்றைத் தாம் உருவாக்கி வைத்திருப்பதாகவும் பாரதியார் எழுதினார். F என்ற ஆங்கில ஒலியைத் தமிழில் ஃப் என்று குறிக்கலாம் என்றும், வடசொற்களின் ஒலியைச் சரியாக எழுத ஸ ஜ ஹ ஷ க்ஷ ஆகிய கிரந்த வடிவுகள் தமிழுக்குத் தேவை என்றும் சிலர் கூறிவருகின்றனர். இதனைக் கண்ட பாவாணர் மேற்கண்ட விளக்கத்தினைத் தந்திருக்கிறார்).

**புணர்ச்சி**

புணர்த்தெழுதப்படும் சொற்களைப் பிரித்துப் பொருள் உணரும் திறன் குறைந்த இக்காலத்தில், எல்லாச் சொற்களையும்

பிரித்தே எழுதுதல் வேண்டும் என்ற கொள்கை பெரும்பாலான தமிழறிஞர்களால் கடைப்பிடிக்கப்படுகிறது. அதன்படி,

> நற்றாயினு நல்ல னெனக்கிவ னென்று நாடி
> இற்றேயிறை யெய்தினை ஏய்ந்தது கோடி யென்னாற்
> பொற்றாரகன் மார்பத மில்லுழை வந்த போதே
> உற்றார்செயன் மற்றுமுண் டோவென வுற்று ரைத்தான்
>
> *(கம்பராமாயணம் 797)*

என்ற பாடலை,

> நல்தாயினும் நல்லன் எனக்கு இவன் என்று நாடி
> இற்றே இறை எய்தினை ஏய்ந்தது கோடி என்னால்
> பொன்தார் அகல்மார்ப தம் இல்லுழை வந்தபோதே
> ஊற்றார் செயல் மற்றும் உண்டோ என உற்று உரைத்தான்

என்று பிரித்து அச்சிடுகிறார்கள். இதனால் முதல் முறைப்படி எழுதுவதால் பெறப்படும் நற்றா - இற்றே - பொற்றா - உற்றார் என்ற எதுகையின்பம் நல்தா - இற்றே - பொன்தார் - உற்றார் என்ற முறையில் எழுதுவதால் கிடைக்கவில்லை. முதல் பாடலில் ஓர் எதுகையில் இருந்த நான்கு அடிகளும் அடுத்த பாடலில் மூன்று எதுகையுடையனவாகின்றன. தொடையின்பம் கெட்டாலும் பொருளின்பம் கிடைக்கட்டும் என்றே இவ்வாறு பிரித்தெழுதுகிறார்கள். பாவாணர் இதனை முழுமையாக ஏற்றுக் கொள்ளவில்லை என்று தோன்றுகிறது. எல்லாச் சொற்களையுமே சேர்த்தெழுதுதலும் எல்லாச் சொற்களையுமே பிரித்தெழுதுதலும் இன்றைய தமிழுக்குச் சிறவாது. வேண்டிய விடங்களில் பொருள் கெடாதபடி, நிறுத்தற்குறிகளையும் பயன்படுத்திச் சேர்த்தோ பிரித்தோ எழுத வேண்டும் என்று அவர் கருதுகிறார். அவர்,

அவனுடனே என்று சேர்த்தெழுதினால் with him என்று பொருள்படும்.

அவன் உடனே என்று பிரித்தெழுதினால் he at once என்று பொருள்படும்.

வந்தானானால் என்று சேர்த்தெழுதினால் If he comes என்று பொருள்படும்.

வந்தான், ஆனால் என்று பிரித்தெழுதினால் He came, but என்று பொருள்படும்.

எனவே இடத்துக்குத் தக்கபடி சேர்த்தோ பிரித்தோ எழுத வேண்டும் என்கிறார் *(கட்.வ.23).*

## நிறுத்தக் குறிகளும் புணர்ச்சியும்

நிறுத்தக் குறிகள் இருக்குமிடத்தில் புணர்ச்சி இராது. அவை இல்லாவிடத்துச் சொற்றொடர்களைத் திரிதற் புணர்ச்சியின்றி எழுதலாம்; ஆனால் தோன்றற் புணர்ச்சியும் கெடுதற் புணர்ச்சியும் இன்றி எழுதுதல் கூடாது *(கட்.வ. 24).*

(இதன் கருத்து: 'தட்டினாற், றிறக்கப்படும்' என்று நிறுத்தற் குறியையும் புணர்ச்சித் திரிபையும் ஒன்றாய் அமைக்கக் கூடாது. நிறுத்தக் குறி இல்லாமல் அதைத் 'தட்டினால் திறக்கப்படும்' என்றும், நிறுத்தற்குறியிட்டுத் 'தட்டினால், திறக்கப்படும்' என்றும் எழுதலாம். ஆனால் ஊருக்குப் போனான் என்று எழுதவேண்டிய தோன்றற் புணர்ச்சித் தொடரை நிறுத்தக் குறியிட்டு 'ஊருக்கு, போனான்' என்று எழுதக் கூடாது. 'மரவேர்' என்பதை மரம், வேர் என்று எழுதக்கூடாது என்பதாம்.)

## ஓர் என்பதன் முன்மெய் வரலாமா?

ஓர் என்பது மெய்ம் முன்னும் வருவது செய்யுட்கு ஏற்கும்; உரைநடைக்கு ஏற்காது *(கட்.வ.26).*

(இதன்கருத்து: ஓர் கல் என்று செய்யுளில் எழுதலாம்; உரைநடையில் ஒரு கல் என்றுதான் எழுதவேண்டும் என்பதே.)

## உயர்திணைப் பெயர்களில் திரிபு

தந்தை பெயரும் மகன் பெயரும் முறையே நிலை மொழியும் வருமொழியுமாய் நின்று புணரின், நிலைமொழியீற்று

னகரமெய் வருமொழி முதலிலுள்ள வல்லினத்திற்கேற்ற மெல்லினமாய்த் திரியும்.

எ.டு.: கீரன் + கொற்றன் = கீரங்கொற்றன்
பிட்டன் + சாத்தன் = பிட்டஞ்சாத்தன்

ஒருவரைக் குறிக்கும் உயர்திணைப் பெயர்களும் சிறுபான்மை இப்புணர்ச்சி பெறும்.

எ.டு.: அரசன் + சண்முகனார் = அரசஞ்சண்முகனார்
இராமச்சந்திரன் + செட்டியார் = இராமச்சந்திரஞ் செட்டியார் *(கட். வ. 30)*

## லகர ளகரங்களின் முன் வலி மிகுதல்

இலக்கண அறிவும் உணர்ச்சியும் இல்லாத சில தான்றோன்றிகள் இக்காலத்தில் லகர ளகர மெய்கட்குப் பின் வலி மிகுத்துக் 'கல்க்கிறான்', 'பால்க்குடம்', 'கேள்க்கிறோம்', 'தூள்ப்பாக்கு' என எழுதுகின்றனர். இதை ஆசிரியர் வலிபெறக் கண்டித்து அறவே ஒழிப்பார்களாக. பாற்குடம், வாட்போர் என்பவற்றைப் பால்குடம், வாள்போர் என எழுதினும் பெருங்குற்றமில்லை. கற்கிறான், கேட்கிறோம் என்பவற்றை 'கல்க்கிறான், கேள்க்கிறோம்' என எழுதுவது தமிழைக் கெடுக்கும் கழிபெருங் குற்றமாகும் *(கட். வ. 31)*.

(இப்படி எழுதியவர் டி.கே.சி. கடும்புணர்ச்சிகளைப் பொருள் விளங்கும்படி பிரித்தெழுத வேண்டும். அதே நேரத்தில் ஓரளவு புணர்ச்சி இலக்கணத்தையும் போற்ற வேண்டும் என்ற நோக்கத்தில் எழுந்ததே இக்கோட்பாடு. எனினும் இன்ன எழுத்துக்குப் பக்கத்தில் இன்னவெழுத்து வரக்கூடாது என்ற தமிழ்மொழியின் மயக்கவிதியை அவர் அறிந்துள்ளதாகத் தெரியவில்லை. ல்க், ள்க், ள்ப் முதலிய ஈரொற்று உடனிலை மெய்ம் மயக்கவிதிக்கு மாறானவை. எனவே பாவாணர் இதை மேற் கண்டவாறு கண்டித்தார். பாவேந்தரும்,

வாட்டடங்கண் கற்றரையை வாள்த்தடங்கண்
கல்த்தரையென் றெழுதி முன்னைப்

பாட்டினிலே பெரும்பிழையைப் பல்குவிப்பா
னுக்குமணிப் பண்டி தர்கள்
சாட்டைகொடுத் தறிக்கைவிடத் தாள்ஒன்றும்
அற்றதுவோ தமக்குச் சோறு
போட்டிடுவார் ஒப்புகிலார் எனும் கருத்தோ
மானமற்ற போக்குத் தானோ? *(தமிழியக்கம்)*

என்று இதைக் கடுமையாகச் சாடினார். தமிழறிஞர் சிலர்,

நல்த்தா மரைக்கயத்தில் நல்லன்னம் சேர்ந்தால்ப்போல்க்
கல்த்தாரைக் கல்த்தாரே காமுறுவர் - கல்ப்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்க்
காக்கை உகக்கும் பிணம்

என்று பழம்பாடல்களை டி.கே.சி. இலக்கணப்படி எழுதிக் காட்டிப் பகடி செய்தனர். தமிழாசிரியர்களும் இதனை ஏற்றுக் கொள்ளவில்லை. சிறிது காலம் டி.கே.சி. நண்பர்கள் சிலரால் பின்பற்றப்பட்ட இவ்விலக்கணம் முற்றிலும் மறைந்தொழிந்தது).

## ஆறு என்னும் பெயர்ப்புணர்ச்சி

ஆறு என்னும் பெயர் எண்ணைக் குறிப்பின், வேற்றுமையிலும் இரட்டாது, இயல்பாய்ப் புணரும். பிறவற்றைக் குறிப்பின் இரட்டும்.

எ.டு.: ஆறில் ஐந்தைக் கழி - எண்ணுப்பெயர்
ஆற்றில் இறங்கு, அவ்வாற்றால் - பிறபொருள் *(கட். வ. 34)*

## ஆ. சொல்லியல்

### பால்திரிந்த மக்கட் பெயர்கள்

ஆண்மை திரிந்து பெண்மை கொண்டவன் பேடி; பெண்மை திரிந்து ஆண்மை கொண்டவள் பேடன்; இவ்விருவர்க்கும் பொதுப் பெயர் பேடு; இம்மூவர்க்கும் பலர்பாற்பெயர் முறையே பேடியர், பேடர், பேடுகள் என்பன. புணர்ச்சி யுணர்ச்சி இல்லாததும், பால்காட்டும் உறுப்பால் ஆணும் பெண்ணும் அல்லாததும் அலி. பேடி என்னும் பெயர் பேடிமார், பேடிகள் எனவும் பலர்பால் ஏற்கும் *(தொல்காப்பியம், சொல். 4, சேனா. உரை, அடிக்குறிப்பு).*

### உயர்சொற்கிளவிகள்

ஒருவர் என்னும் சொல்லும் உயர்சொற்கிளவியே. ஒருவர் தாமாய் ஒன்றை எண்ணும்போதும், ஓர் ஆசிரியனும் ஒரு தலைவனும் ஒன்றைக் கூறும்போதும், 'யாம்' என்னும் பன்மைச் சொல் நிகழும். ஆசிரியர் கூறுவதை ஆங்கிலத்தில் "Editorial we' என்பர். யாங்கள், நீங்கள், அவர்கள் என்னும் இரட்டைப் பன்மைப் பெயர்கள் ஆசிரியர் காலத்தில் வழங்கவில்லை.

நகையாடல் பற்றி வந்த 'நரியனார்', 'தேரையார்' என்பனவும், உயர்வு பற்றி வந்த 'நாலடியார்', 'திருக்கோவையார்' என்பனவும், இவை போன்றவும் ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவிகளாம் *(தொல். சொல். 27, சேனா. உரை, அடிக்குறிப்பு).*

'யாம்' என்பது வழக்குச் சொல்; இலக்கண முறைமையால் சொல்லும் சொல்லன்று என்று சேனாவரையர் காட்டியிருந்தார். அது இக்காலத்தில் இலக்கணச் சொல்லாகக் கொள்ளப்படுகிறது

எனபதைக் காட்டவும், ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவிக்கு உரையில் தெளிவான எடுத்துக்காட்டுத் தரப்படவில்லை என்பதற்காகவும் மேற்கண்ட கருத்துகளைப் பாவாணர் அடிக்குறிப்பாகத் தந்துள்ளார்.

## சேரி என்பதன் பொருள்

பண்டைக்காலத்தில் ஒன்றாகச் சேர்ந்திருந்த ஒரு குலத்தார் வீட்டுத் தொகுதிக்குச் சேரி என்று பெயர். அது இக்காலத்தில் குடி அல்லது தெரு எனப்படும். சேரி என்பது நகருக்குப் புறம்பாக உள்ள தாழ்த்தப்பட்டோர் இருக்கையைக் குறித்தது பிற்கால வழக்கு. அக்கிராகாரம் என்பது பார்ப்பன வழக்கு *(தொல். சொல். 49, சேனா. உரை. அடிக்குறிப்பு).*

(தலைமை பற்றிய வழக்குக்குச் சேனாவரையர் 'பார்ப்பனச் சேரி' என்ற சொல்லை எடுத்துக்காட்டினார். அதன் அடிக் குறிப்பாகப் பாவாணர் மேற்கண்ட விளக்கத்தைத் தந்துள்ளார்.)

## பலபொருள் ஒரு சொல்

'ஒரு பொருள் ஒரு பொருளே தரும். ஒரே சொல் பல பொருள் தருமாயின், பொருள்தோறும் வேறு சொல்லாம். ஆயினும் எழுத்தொப்புமை பற்றித் தொல்காப்பியர் 'பல பொருளொரு சொல் (52) என்றார் என்பது' *(தொல். சொல். 57, சேனா. உரை, அடிக்குறிப்பு).*

(ஒரு சொல் பல பொருட்கண்ணும் சென்றதெனப்படாது; பல சொல் எனவே கொள்ளப்படும் என்று கூறினார் சேனாவரையர். ஆனால் தொல்காப்பியர் வினைவேறுபடூஉம் **பல பொருள் ஒரு சொல்** என்றது எங்ஙனம்? என்ற ஐயத்தை நீக்குதற்கு, 'பல பொருள் ஒரு சொல்' என்புழி எழுத்தொப்புமை பற்றி ஒரு சொல்லென்றார்' என்று விளக்கினார். இவ்விளக்கம் சுருக்கமாக உள்ளமையின் அதனை மேலும் தெளிவாகப் பாவாணர் மேற்கண்டவாறு விளக்கியுள்ளார்.)

## ஆறாம் வேற்றுமை உருபும் உயர்திணையும்

'கண் சாத்தனது, கண்கள் சாத்தன, என்னும் எழுவாய்த் தொடர்களே சாத்தனது கண், சாத்தன கண்கள் என முறைமாறி ஆறாம் வேற்றுமை வடிவு பெற்றமையின், 'அது', 'அ' என்னும் அஃறிணையுருபுகள் உயர்திணைக்கு ஏலாமை பற்றி அத்திணைக்கண் குவ்வுருவு விரிக்குமாறு கூறப்பட்டது. நம்பி மகன் என்பது நம்பிக்கு மகன் என விரிக்கப்படினும், குவ்வுருபு இரு சொற்றொடர்க்கே ஏற்குமெனவும், நம்பிக்கு மகன் வந்தான் என்புழிப் பிளவுபட்டிசைத்து வேறுபொருளும்படுதலின், பல சொற்றொடர்க்கு இன்னுருபே ஏற்கும் எனவும் அறிந்துகொள்க. உடைய என்னும் உருபோ எனின், அது சொல்லுருபாதலானும் இன்னோசைத்தாகாமையானும், இன் உருபு போலச் சிறந்ததன்றென்க *(தொல். சொல். 94, சேனா. உரை, அடிக்குறிப்பு)*.

*('நம்பி மகன்' என்பதை 'நம்பியது மகன்' என விரித்தால் அது என்னும் அஃறிணைப் பால் தோன்றும்; எனவே நம்பிக்கு மகன் என விரிக்க வேண்டும் என்று தொல்காப்பியர் கூறினாலும், 'நம்பி மகன் வந்தான்' என்ற பல சொற்கள் உள்ள தொடரை 'நம்பிக்கு மகன் வந்தான்' என்று விரித்தெழுதினால் 'நம்பிக்காக மகன் வந்தான்' என வேறுபொருள் படக்கூடும். எனவே நம்பியின் மகன் என்று விரிப்பதே சிறப்பு என்று தம் கருத்தைக் கூறுகின்றார்).*

## கூடிவரு வழக்கின் ஆடியற் பெயர்

'பட்டி புத்திரர் - பட்டியென்பவன் குமாரர். இப்பட்டியென்பவன் உச்சயினிபுரத்தரசனாகிய விக்கிரமாதித்தன் மந்திரி. இவன் மதிநுட்பம் நூலோடுடையவனாக இருந்ததோடு மக்களாற் செயற்கரிய அரும்பெருங் காரியங்களையியற்றியவன். இவன் பேராற்றலையும் மதிநுட்பத்தையும் அறியாத தமிழ் மக்கள் இலர். அவன் மக்கள், எனவே அன்னாரும் அத்தகைய பேராற்றலும், மதிநுட்பமும், செயற்கரியனவற்றைச் செய்து போதரும் வன்மையும் உடையார் என்பது விளக்கிய, 'பட்டிபுத்திரர்' என்றார். கங்கை மாத்திரர் - கங்கையை

அளவிடுபவர். மக்களால் அளவிடற்கரிய கங்கையினையும் அளவிட்டறியும் ஆற்றலுடையார் என்பது விளக்கிய, 'கங்கை மாத்திரர்' என்றார். இப்பெயர்கள் பண்டைக் காலத்துச் சிறார்கள் விளையாடல் குறித்தகாலத்துப் படைத்திட்டுக் கொண்ட பெயராம்.

இக்காலத்தும் இளந்துணைமார் பலர் குழுமித் தம்மிற் கூடி விளையாடல் குறித்த போழ்தத்து, அம்மகாரில் இருவர் தலைவராக நிற்க ஏனையோர் இருவர் இருவராகப் பிரிந்து தனியிடஞ் சென்று, தம்மிற்பெயர் புனைந்து தலைவர்களை யண்மி, "காற்றைக் கலசத்திலடைத்தவன் ஒருவன்; கடலைக் கையால் நீந்தினவன் ஒருவன்; இவருள் நுமக்கு யாவன் வேண்டும்?" எனவும், "வானத்தை வில்லாக வளைத்தவன் ஒருவன்; ஆற்று மணலைக் கயிறாகத் திரித்தவன் ஒருவன்; இவருள் யாவன் நுமக்கு வேண்டும்?'' எனவும் வினவுவர். அத்தலைவர்கள் இன்னின்னார் வேண்டுமென, அவர்கள் பகுதியிற் சேர்ந்து ஆடலியற்றுவர் என்க' *(தொல். சொல். 165 சேனா. உரை, அடிக்குறிப்பு).*

(தொல்காப்பியர் பாலறிவந்த உயர்திணைப் பெயர்களைக் கூறும்போது, கூடிவருவழக்கின் ஆடியற்பெயர்களைக் கூறினார். அதற்குச் சேனாவரையர், 'பட்டிபுத்திரர், கங்கை மாத்திரர் என்பன. இவை ஆடலைக் குறித்து இளையோர் பகுதிபடக் கூறிய வழியல்லது வழங்கப்படாமையின் குழுவின் பெயரின் வேறாயின' என்று விளக்கினார். இந்த விளக்கம் மிகச் சுருக்கமாயிருத்தலின், பாவாணர் மேற்கண்டவாறு விரித்தெழுதினார்.)

## 'மக்கள்' அஃறிணையா? உயர்திணையா?

'கள் விகுதி பலவின்பாற்குரியதென்று இந்நூற்பா ('கள்ளொடு சிவணும்' என்ற தொல். சொல். 169 நூற்பா) வரையறுக்கினும், இவ்விகுதி பெற்ற மக்கள் என்னுஞ் சொல் ஆசிரியர் காலத்திலேயே உயர்திணை குறித்தமை,

'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' *(தொல். சொல். 1)*

என்பதனாலறியப்படும் மக்கள் என்பது பலர்பால் வினைகொண்டு முடிதலின் தொகுதிப் பெயரன்றிப் பலர்பாற் பெயரே. மக + கள் = மக்கள்; இது மரூஉப் புணர்ச்சி. மகவு என்னும் பெயர் குழந்தையைக் குறித்தலாலும், பகுத்தறிவில்லாத குழந்தை அஃறிணையின் பாற்பட்டதே யாதலாலும், மரபியலில் குரங்குக் குட்டிக்கும் மகவுப் பெயர் கூறப்பட்டிருத்தலாலும், முதலில் அஃறிணை மரபிற் சிறு பிள்ளைகளைக் குறித்த மக்கள் என்னும் பெயர் பிற்காலத்தில் ஒருவனின் மக்களான பெரியோரையும் ஓர் ஊர்த் தலைவனின் மக்களான பொதுமக்களையும் குறிக்கத் தலைப்பட்டதென்று கொள்ள இடமுண்டு. முது பண்டைக் காலத்தில் ஒவ்வோர் ஊரும் ஒவ்வொரு பெருங்குடும்பமாயிருந்து அவ்வக்குடும்பத் தலைவனாலேயே ஆளப்பட்டு வந்தமை நோக்குக. மக்கள் என்னுஞ் சொல் முதன்முதல் அஃறிணை குறித்தமை கருதியே, 'மக்கள் என்னும் சொல்லால் சுட்டப்படும் உயர்குலம்' என்னும் கருத்தில் மக்கட் சுட்டென்று கூறியிருக்கலாம் தொல்காப்பியர். *(தொல். சொல். 169. சேனா. உரை, அடிக்குறிப்பு).*

*(கள் ஈறு அஃறிணைக்கு உரியதென்று தொல்காப்பியர் கூறினும், மக்கள் என்னும் உயர்திணைச் சொல்லில் அது வருவானேன்? என்னும் ஐயத்தை நீக்குதற்குப் பாவாணர் இவ்வடிக்குறிப்பினை எழுதியிருக்கிறார்.)*

## று, டு என்பன ஒன்றன்பால் விகுதிகளா?

'ஒன்றன்பால் விகுதி உண்மையில் 'து' ஒன்றே. று, டு என்பன அதன் புணர்ச்சித்திரிபே. புக்கு + அன் + து = புக்கன்று; பால் + து = பாற்று. குண்டுகண் + து = குண்டுகட்டு; குறுந்தாள் + து = குறுந்தாட்டு. து - விகுதி அது என்பதன் குறுக்கமாம்.' *(தொல். சொல். 217, சேனா. உரை, அடிக்குறிப்பு).*

(ஒன்றன் படர்க்கைக்குத் து, று, டு என்பன இறுதி நிலைகளாக உள்ளன என்று தொல்காப்பியர் வண்ணனை முறையில் கூறுகிறார். பாவாணர் அவை து என்ற ஒரே விகுதியின் திரிபுகளே என்பதை வரலாற்று முறையில் விளக்குகிறார்.)

## 'தொன்னெறி மொழிவயின் ஆகுந'

'தொன்னெறி மொழிவயின் ஆஅகுநவும்' *(தொல். சொல் 449)* என்பதற்கு இவ்வுரையாசிரியர், (சேனாவரையர்) முதுசொல்லாகிய செய்யுள் வேறுபாட்டின் கண் இயைபில்லன இயைந்தனவாய் வருவன. அவை, யாற்றுட் செத்த எருமையை ஈர்த்தல் ஊர்க்குயவர்க்குக் கடன் என்பது முதலான' என வரைந்துள்ளார். இத்தொடர் மொழியின் பொருள் தெற்றெனப் புலப்படவில்லை. இயைபில்லன இயைந்தனவாய் வருதலென்றமையின், ஊர்க்குயவர்க்கு எருமையை ஈர்த்தலில் இயைபு இன்றேனும், இயைபுண்மை ஒரு தலையான் வேண்டற்பாலதாம். அன்றியும் அது முதுசொல்லாயிருத்தலோடு செய்யுள் வேறுபாடுடையதாய் இருக்க வேண்டுமெனவும் ஆணை தந்துள்ளார். நம் தமிழ்நாட்டின்கண் பண்டைக் காலந்தொட்டுப் பரவை வழக்கின் கண் அடிப்பட்ட சான்றோரால் நெறிப்பட வழங்கிவரும் இம் முதுமொழி பொருத்தமுடையதாகக் காணக் கிடக்கின்றது. அது வருமாறு:

வாணிகச் சாத்தொடு சென்றானொருவன் அச்சாத்தினின்றும் பிரிந்து ஒரு பட்டினத்துட் சென்று, பலவெருமைகளைப் பொருள்கொடுத்தேற்றுத் தன்நாடு சேறற்கு ஒருப்பட்டுப் பலப்பல காவதங் கடந்து, ஒரு கான் யாற் றடைகரையை யண்மி, அவ்வெருமைகளை நீரருந்தச் செய்து அயர்வுயிர்த்துப் பின்னர் அவ்வாற்றைக் கடக்கு மமையத்து, காலமல்லாத காலத்துச் சேய்மைக்கண் பெய்த மழையான் பொருக்கென வெள்ளந்தோன்றி, அவ்வெருமைகளையெல்லாம் அடித்துக் கொண்டு ஓர் ஊர்ப்புறத் தொதுக்கிவிட்டது. அதனை யுணர்ந்த அவ்வூரவர், அவைகளை ஈர்த்துக் கொணர்ந்து கரை சேர்த்தற்குப் பலரை வேண்டியும், நாற்றம் மிகுதியாக விருந்தமையின் ஒருவரும் உடன்பட்டிலர், இதனையுணர்ந்த பெரியாரொருவர் இங்ஙனமாய செயல் நேரிடின், இச்செயலை இன்னவர் செய்து முடித்தல் வேண்டுமென நம்மூர் அடங்கலிலிருக்கும்; அதனைக் கணக்கனை யழைத்துக் கேட்பின் உண்மை வெளியாமென உரைத்தனர். அவ்வாறே கணக்கனையழைத்துக் கேட்க அவன்

அடங்கலை எடுத்து வந்து "கண்ணூறீஇக் கழறுகின்றேன்" எனக் கூறித் தம்மில்லிற்சென்று, தனக்கு ஆண்டுதோறும் நன்கொடையாகக் கொடுக்கும் பொருளை அவ்வாண்டிற் கொடாத அவ்வூர்க் குயவரை யொறுத்தற்குத் தக்க வமைய மிதுவே எனக்கருதி,

> காட்டெரு முட்டை பொறுக்கி,
> மட்கலஞ் சுட்ட புகையான்
> மேற்கே மேகந் தோன்றி
> மின்னியிடித்து மழைபொழிந்து
> யாற்றில் நீத்தம் பெருகி
> யடித்துக் கொல்லும் எருமைகளை
> ஈர்த்துக் கொணர்ந்து கரையேற்றல்
> இவ்வூர்க் குயவர்க் கென்றுங் கடனே

என்று ஒரு பழைய ஓலையில் வரைந்து அவ்வடங்கலோடு சேர்த்துக் கட்டி அவ்வூரவர்முன் கொணர்ந்து கட்டையவிழ்த்துப் பல ஏடுகளைத் தள்ளிப் படித்துக் காட்டினன். அதனைக் கேட்ட பெரியார் பலரும் குயவன் சுள்ளையினெழுந்த புகையானாய மேகந்தந்த நீரான் எருமை சாதலின், இவ்வூர்க்குயவரே இவற்றைக் கரையேற்றல் முறையென முடிவு செய்தனர் என்பதாம். இது பொருத்தமாகக் காணப்படுகின்றது.

## எண்ணடி உயர்திணைப் பெயர்

இரண்டுபேர், மூன்றுபேர், இருபேர், முப்பேர் என்பவற்றினும் இருவர், மூவர் என்பன சிறந்தவாகும்.

இருபத்தி, நூத்தி என்பன இருபத்து, நூற்று என்றிருத்தல் வேண்டும் (கட்.வ. 38).

## பொருள் திரிபடைந்த சொற்கள்

சில சொற்கள் தாம் முதலிற் குறித்த பொருளையிழந்து இன்று வேறுபொருள் குறிக்கின்றன. அவற்றைப் புதுப் பொருளிலேயே வழங்கவேண்டும்.

| எ.டு.: சொல் | முன்னைப்பொருள் | இற்றைப்பொருள் |
|---|---|---|
| எண்ணெய் (எள் + நெய்) | நல்லெண்ணெய் | எண்ணெய்ப்பொது |
| பரதேசி | அயல்நாட்டான் | பண்டாரம் |
| போக்கிரி (போக்கிலி) | அகதி, ஏழை | தீயவன் |

*(கட்.வ. 41)*

## பால்மாற்றம்

'அம்மா வருகிறது' என்பது தவறு. 'அம்மா வருகிறாள்' என்று பெண்பாலிலாவது, 'அம்மா வருகிறார்' அல்லது 'வருகிறார்கள்' என்று உயர்வுப் பன்மையிலாவது கூறல் வேண்டும்.

## துணைவினைகள்

ஆடு, இடு, இரு, உறு, கொள், படு, போ, போடு, வா, விடு முதலிய பல சொற்கள் பெயரொடும் வினையொடும் சேர்ந்து துணை வினைகளாக வரும்.

எ.டு.: உரையாடு, வந்திடு, எழுந்திரு, கண்ணுறு, வேண்டிக்கொள், வரையப்படு, கொண்டுபோ, உடைத்துப்போடு, கொண்டு வா, வந்துவிடு *(உயர்தரக் கட்டுரை இலக்கணம் I, பக்கம் 2)*

## தொகை எழுவாய் (தோன்றா எழுவாய்)

எழுவாய் சில வாக்கியங்களில் தொக்கு நிற்பதுமுண்டு. அது தொகையெழுவாய் அல்லது தோன்றா எழுவாய் எனப்படும்.

எ.டு.: நாளைக்கு வருவேன்

இதில் நான் என்னும் எழுவாய் தொக்கு நின்றது (உ.க.இ. 1; 8). சிலவாக்கியங்களில் ஈரெழுவாய்கள் தொகும்.

எ.டு.: (மழை) பெய்தும் (பயிர்) கெட்டது; (மழை) பெய்யாதும் (பயிர்) கெட்டது *(உ.க.இ. I; 17).*

## தொகைப்பயனிலை (தோன்றாப் பயனிலை)

சில வாக்கியங்களில் பயனிலை தொகுவதுண்டு

எ.டு.: ஆடி மாதம் அவரை போட்டால் கார்த்திகை மாதம் காய் (காய்க்கும்) *(உ.க.இ. I; 12).*

## எழுவாய் பயனிலைகளின் தொகை

*சில வாக்கியங்களில் எழுவாய் பயனிலை இரண்டும் தொகும்.*

*எ.டு.: (அவன்) ஆறு கடக்குமட்டும் அண்ணன் தம்பி (என்றான்) அதற்குப் பின் நீ யார்? நான் யார்? (என்கிறான்)*

*(உ.க.இ.I; 18).*

## தொகைச்செயப்படுபொருள் (தோன்றாச் செயப்படு பொருள்)

உரையாட்டின் முன் தொடர்பினால், பொருளுணர்த்தும் வாக்கியங்களில் இயற்பெயரும் சுட்டுப்பெயருமான செயப்படு பொருள் தொகும்.

எ.டு.: அவர் ஒரு வாரத்துக்கு முன்னமே (பணத்தை) அனுப்பி விட்டார். பழமொழிகள், வணிகக் கூற்றுகள், உரையாடல்கள், நெருங்கிய நண்பர் உறவினர்களின் மடல்கள், விளம்பரங்களில் இத்தொகை நடையைக் கையாளலாம் *(உ.க.இ. I, 18).*

## தொடர்மொழி வகைகள்

1. **பெயர்த் தொடர்மொழி:** பெயரின் தொழிலைச் செய்யும் தொடர்மொழி பெயர்த் தொடர்மொழி

   எ.டு.: **காலையில் எழுந்திருத்தல்** காக்கையின் சிறந்த குணங்களில் ஒன்று.

2. **பெயரெச்சத் தொடர்மொழி:** பெயரைத்தழுவும் தொடர் பெயரெச்சத் தொடர்மொழியாம்.

   எ.டு.: **காட்டில் வாழும்** விலங்கு மிகக் கொடியது.

3. **வினையெச்சத் தொடர்மொழி:** வினையையும் வினையடிச் சொல்லையும் தழுவும் தொடர்மொழி வினையெச்சத்-தொடர் மொழியாம்.

எ.டு.: அவர் **கோபமான** நிலையில் இருக்கிறார்

*(உ.க.இ. I, 25).*

## கிளவிய வகைகள் (Clauses)

1. **பெயர்க்கிளவியம் (Noun Clause):** பெயர்த் தன்மையுடைய கிளவியம் பெயர்க்கிளவியம். அது எழுவாயாகவும் செயப்படு பொருளாகவும் வரும். 'என்பது', 'அல்லது', 'என்று' என்னும் சொல் அதைப் பயனிலையுடன் இணைக்கும்.

   எ.டு.: **குயில் காகத்தின் கூட்டில் முட்டையிடும் என்பது** பலருக்குத் தெரியாது.

2. **பெயரெச்சக் கிளவியம் (Adjective Clause):** பெயரெச்சம் போல் பெயரைத் தழுவி நிற்கும் கிளவியம் பெயரெச்சக் கிளவியம்.

   எ.டு.: **தச்சன் செய்த** பெட்டி

3. **வினையெச்சக் கிளவியம் (Adverb Clause):** வினைமுற்றையும் பெயரெச்சத்தையும், வேறொரு வினையெச்சத்தையும், தொழிற் பெயரையும், வினையாலணையும் பெயரையும் தழுவும் கிளவியம் வினையெச்சக் கிளவியம்.

   எ.டு.: **மழை பெய்து** பயிர் விளைகிறது *(உ.க.இ. I, 35).*

## வாக்கிய வகைகள்

1. **தனிவாக்கியம் (Simple sentence):** ஒரே எழுவாயும் ஒரே முற்றுப் பயனிலையும் உள்ள வாக்கியம் தனி வாக்கியம்.

   எ.டு.: மயில் ஆடுகிறது.

   ஒரு மிக அழகான ஆண் மயில் மேலை மலைப் பூஞ்சோலையில் நாள்தோறும் காலை மாலை களிப்புடன் தோகை விரித்து ஆடுகிறது.

இவை யிரண்டும் ஒரே கருத்தின் சுருக்கமும் விரிவும் ஆகும். இவை யிரண்டும் தனி வாக்கியங்களே.

2. **கூட்டுவாக்கியம் (Compound sentence):** ஓர் எழுவாயும் பல முற்றுப் பயனிலைகளும் கொண்ட வாக்கியமும், பல எழுவாயும் பல முற்றுப் பயனிலைகளும் கொண்ட வாக்கியமும் கூட்டு வாக்கியமாகும்.

   எ.டு.: மாணவரே, நீங்கள் உங்கள் பாடத்தை நன்றாய்ப் படிக்க வேண்டும்; தேர்வில் சிறப்பாய்த் தேறவேண்டும்.

3. **கலப்புவாக்கியம் (Complex sentence):** ஒரு தலைமைக் கிளவியமும் (Principal or Main Clause) அல்லது பல சார்புக் கிளவியமும் (Subordinate or Dependent clause or clauses) கொண்ட வாக்கியம் கலப்பு வாக்கியம் ஆகும்.

   தலைமைக் கிளவியம் தன்னில் தானே கருத்து முடிந்ததாய் இருக்கும். சார்புக் கிளவியம் தன்னளவில் கருத்து முடியாமல் தலைமைக் கிளவியத்தைச் சார்ந்தே கருத்து முடிவதாயிருக்கும்.

   எ.டு.: கால்டுவெல் கண்காணியர், தமிழ் ஒரு தனிமொழி என விளக்கியுள்ளார்.

4. **கதம்ப வாக்கியம் (Mixed sentence):** கூட்டு வாக்கியமும், கலப்பு வாக்கியமும் கலந்து வருவது கதம்ப வாக்கியமாகும்.

   எடு: ஆங்கிலேயர் பாஞ்சாலங்குறிச்சி வேளாகிய கட்டபொம்முவிடம் கப்பம் கேட்டபோது, அவர் "வானம் பெய்கிறது; ஞாலம் விளைகிறது; நாங்கள் என் உங்கட்குக் கப்பம் கட்ட வேண்டும்?" என்று செப்பினாராம். *(உ.க.இ. I, 44).*

## பொருட்போங்கு பற்றிய வாக்கிய வகைகள்

1. **விளம்பு வாக்கியம் (Declarative Sentence):** ஒரு செய்தியை விளம்பும் வாக்கியம் விளம்பு வாக்கியம் எனப்படும்.

   எ.டு.: இன்று மழை வரும்.

2. ஏவல் வாக்கியம் (**Imperative Sentence**): ஏவலும், வாழ்த்தும், வேண்டுகோளும் பற்றிய வாக்கியம்.

எ.டு.: செய்வன திருந்தச் செய்.

3. வினா வாக்கியம் (**Interrogative Sentence**): ஒன்றைப் பற்றி வினவும் வாக்கியம்.

எ.டு.: கூட்டுடைமையாட்சிக்கும் பொதுவுடைமையாட்சிக்கும் வேற்றுமை யாது?

4. உணர்ச்சி வாக்கியம் (**Exclamatory Sentence**) : உள்ளத்தில் எழும் ஒரு வலிய உணர்ச்சியை வெளிப்படுத்தும் வாக்கியம்.

எடு: கற்பகப் பறவை எவ்வளவு அழகாயிருக்கிறது! *(உ.க.இ. I, 55)*

## சொல் முறை (Order of Words)

குலம், தொழில், புலமை, தவம், பட்டம், பதவி முதலியன பற்றி வழங்கும் சிறப்புப் பெயர்கள், இயற்பெயருக்கு முன்னும் பின்னும் நிற்கலாம். முன் நிற்பது பண்டை முறை பின் நிற்பது இற்றை முறை. முன் நிற்பின் இருபெயரும் இயல்பாய் இருக்கும். பின்நிற்பின் இயற்பெயரின் இறுதி பெரும்பாலும் திரியும்.

| எ.டு.: | **பண்டைமுறை** | **இற்றை முறை** |
|---|---|---|
| | முனிவன் அகத்தியன் | அகத்திய முனிவன் |

இக்காலப் பட்டப் பெயர்களுள், ஆங்கிலக் கல்விப் பட்டங்கள் ஒழிந்த பிறவெல்லாம் முற்காலப் பட்டப் பெயர்கள் போன்று இயற்பெயருக்கு முன்னரே நிற்கும்.

எ.டு.: புலவர் ச. ஆறுமுகம் க.மு., கல்.மு. *(உ.க.இ. I. 56)*

## வினா மரபு

ஒரு பொருளைப் பற்றி வினவும்போது, வினவப்படும் பொருளைக் குறிக்கும் சொல்லின் ஈற்றில் வினாவெழுத்து இருத்தல் வேண்டும்.

எ.டு. வினா — வினவப்படும் பொருள்

கண்ணனா வந்தான்? — ஆள்

கண்ணன் நேற்றா வந்தான்? — காலம்

கண்ணன் நேற்று என்னிடமா வந்தான்? — இடம்

கண்ணன் நேற்று என்னிடம் வண்டியிலா வந்தான்? — ஊர்தி

கண்ணன் நேற்று வேகமாகவா வந்தான்? — வந்த வகை

கண்ணன் என்னிடம் புத்தகமா தந்தான்? — பொருள் *(உ.க.இ.I 66)*

## மூவிடப் பெயர்களின் வரிசை

மூவிடப் பதிற்பெயர்களையும் சேர்த்துக் கூறும்போது, முன்னிலைப் பெயரை முதலிலும், தன்மைப் பெயரை இடையிலும், படர்க்கைப் பெயரை இறுதியிலும் கூறுவது நன்று.

எ.டு. நீயும் நானும்

நீயும் நானும் அவனும் *(உ.க.இ.I 67)*

**இசைபு** : *1.* ஒரு, இரு, இரண்டு, மூன்று, சில, பல முதலிய என்னும் பெயரெச்சங்கள் அஃறிணையீறு கொண்டுள்ளமையால் உயர்திணைப் பெயர்களைத் தழுவாவென்றும், இரு மக்கள், சில மாணவர் என்று கூடக் கூறாமல் இருவர் மக்கள், சிலர் மாணவர் அல்லது மக்களிருவர், மாணவர் சிலர் என்று கூறுதல் வேண்டும் என்றும் சில அறிஞர் கருதுவர். பெயரெச்ச ஈறுகள் திணைபால் காட்டாமையானும், கிழமை வேற்றுமைப் பெயரெச்ச மொழிந்த எல்லாப் பெயரெச்சங்களும் இருதிணை ஐம்பால் மூவிடங்கட்கும் பொதுவாகையாலும், இறந்தகால நிகழ்காலப் பெயரெச்சங்களும், பல குறிப்புப் பெயரெச்சங்களும் அகரவீறு கொண்டுள்ளமை யாலும், எண்ணுப் பெயரெச்சம் குறிப்புப் பெயரெச்ச வகையாதலாலும், இருமக்கள், இரண்டு பேர், மூன்று மாணவர், மூவாசிரியர், சில மாந்தர் என்று கூறுவதெல்லாம் வழுவல்ல என்றறிக.

2. ஒரு, இரு முதலிய சொற்களும், சில், பல் என்னும் சொற்களும் எப்போதும் பெயரெச்சமாகவே இருக்கும். இரண்டு, மூன்று முதலிய சொற்களும், சில பல என்னும் சொற்களும் பெயராகவும், பெயரெச்சமாகவும் இருக்கும். ஒன்று என்னும் சொல் என்றும் பெயராகவே இருக்கும்.

எ.டு. ஒரு சொல், சில் நாள் - பெயரெச்சம்
இரண்டு வீடு, சில மாணவர் - பெயரெச்சம்
ஒன்று இருந்தது, இரண்டு சென்றன, சில வந்தன - பெயர்

*(உ.க.இ.I 76)*

## 6ஆம் வேற்றுமைத் தொகையில் சாரியைகள்

6ஆம் வேற்றுமைத் தொகை தன் தம் என்னும் சாரியை பெற்றுவரினும் இருமைக்கும் பொதுவாம். ஒருமைப் பெயர் 'தன்' சாரியையும், பன்மைப் பெயர் 'தம்' சாரியையும் பெறும்.

| எ.டு. | ஒருமை | பன்மை |
|---|---|---|
| | என் தன் கை | என்தன் கைகள் |
| | எம் தம் வீடு | எம் தம் வீடுகள் |
| | முருகன் தன் கை | முருகன் தன் கைகள் |
| | மக்கள் தம்மொழி | மக்கள் தம் மொழிகள் |

*(உ.க.இ.I 78)*

## ஒருமை, ஒற்றைப் பன்மை, இரட்டைப் பன்மைப் பெயர்கள் அடுக்கி வருதல்

சாமுவேல் அவர்கள், ஐயர் அவர்கள் என ஒருமைப் பெயருக்கும், ஒற்றைப் பன்மைப் பெயருக்கும் பின் இரட்டைப் பன்மைப் பெயர் வருவது வழுவமைதியாம். (சாமுவேல் - ஒருமைப் பெயர்; ஐயர் - ஒற்றைப்பன்மைப் பெயர்; அவர்கள் இரட்டைப் பன்மைப்பெயர்)

## சிறப்புப் பெயரும் இயற்பெயரும் விகுதியொவ்வாது வருதல்

திருவாளர் பேரின்பம், திருவாளர் அச்சுத மேனன் எனச் சிறப்புப் பெயரும் இயற்பெயரும் விகுதியொவ்வாது வருவன வெல்லாம் வழுவமைதியாகும்.

## ஒருமை, ஒற்றைப் பன்மை, இரட்டைப் பன்மை மரபுகள்

ஒருவனுக்குப் பிறர் இழிந்தோன் ஒத்தோன் உயர்ந்தோன் என மூவகைப்படுதலால், அம்மூவகையார்க்கும் ஏற்ப, அவரைக் குறிக்கும் பெயர்களையும், அவற்றின் வினைகளையும் முறையே ஒருமையிலும் ஒற்றைப் பன்மையிலும், இரட்டைப் பன்மையிலும் கூறல் வேண்டும். ஒருவரைக் குறிக்கும் பன்மையெல்லாம் உயர்வுப் பன்மையாம்.

எ.டு. முன்னிலை

நீ வா - இழிந்தோன் வினை-ஒருமை
நீர் வாரும் - ஒத்தோன் வினை
நீங்கள் வாருங்கள் - உயர்ந்தோன் வினை
} உயர்வுப் பன்மை

படர்க்கை

அவன் வந்தான்-இழிந்தோன் வினை-ஒருமை
அவர் வந்தார் - ஒத்தோன் வினை
அவர்கள் வந்தார்கள் - உயர்ந்தோன் வினை
} உயர்வுப் பன்மை *(உ.க.இ., I 84)*

## 'காணோம்' வழுவாகுமிடம்

'யாம் காணோம்' என்னும் தன்மைப் பன்மைச் சொல்லைக் காணேன் என்னும் தன்மையொருமைப் பொருளில் அதுவும் காணும் என்னும் கொச்சை வடிவில் வழங்குவது இருமடி வழுவாகும் *(உ.க.இ., I 91)*.

## இளமைப் பெயர் முடிபு

குழவிப் பருவம், பிள்ளைப் பருவம், பையற் பருவம், விடலைப் பருவம், இடைமைப் பருவம், முதுமைப்பருவம் என மக்கட் பருவம் அறுதிறப்படும், அவற்றுள் குழவிப் பருவம் ஒன்றன் பால் முடிபிற்கே உரியதென்றும், பிள்ளைப் பருவம் ஒன்றன்பால், ஆண்பால், பெண்பால் முடிபுகட்கும் உரியதென்றும், ஏனைப் பருவமெல்லாம் ஆண்பால் பெண்பால் முடிபுகட்கே உரியவென்றும் அறிதல் வேண்டும்.

எ.டு.: குழந்தை அழுகிறது - ஒன்றன்பால்
பிள்ளை வருகிறான் - ஆண்பால்
பிள்ளை வருகிறாள் - பெண்பால்
பிள்ளை வருகிறது - ஒன்றன்பால் *(உ.க.இ., I 92)*

## 'ஆள் வருகிறது' – வழு

'ஓர் ஆள் வருகிறது' என ஒன்றன்பால் வினைகொண்டு முடிப்பதே உலக வழக்காயினும், 'ஆண் பிள்ளையாள்; பெண் பிள்ளையாள்' என்னும் உலக வழக்கு உண்மையானும், பகுத்தறிவுள்ள பெரிய ஆளை அஃறிணைச் சொல்லால் கூறுவது பொருந்தாமையானும். அது வழுவென்று விலக்கப்படும் *(உ.க.இ., I 94)*.

## "அப்பா, அம்மா' வழுவாகுமிடம்

அப்பா, ஐயா, அம்மா என்னும் விளி வேற்றுமை வடிவுகளை முதல் வேற்றுமையாக வழங்குவது இன்று பெரு வழக்காயினும், அது இலக்கண நடைக்கேற்காது.

'அம்மா வருகிறது' என்னும் அஃறிணை முடிபு முற்றும் வழுவாம். 'அம்மாள்' என விளிவேற்றுமை வடிவோடு பெண் பால் விகுதி சேர்ப்பதும், அப்பார், ஐயார், அண்ணார் என அவ்வடிவோடு உயர்வுப் பன்மையீறு சேர்ப்பதும் வழுவே *(உ.க.இ., I 95)*.

பேர்வழி என்னும் சொல்லும் உயர்வழக்கிற் குரியதன்று *(உ.க.இ., I 100)*.

## உயர்திணைப் பன்மைப்பெயர்களின் ஈறுகள்

உயர்திணைப் பன்மைப் பெயர்களை, இயன்றவரை 'கள்' விகுதியல்லாத பிறவிகுதிகள் கொண்டே அமைத்தல் வேண்டும். அது இயலாதவிடத்துக் 'கள்' விகுதி கொண்டமைக்கலாம்.

எ.டு.: பேதையர், அண்ணன்மார், மக்கள், பிள்ளைகள், குடிகள், மண்டுகள் *(உ.க.இ., I 100)*

*(எனவே அண்ணன்கள், தம்பிகள், தங்கைகள், மாமன்கள், மாமிகள் என்றெல்லாம் எழுதுவது சிறப்பன்று என்று தெளியலாம்)*

## ஒன்றாகக் கலந்த இருபொருட்பெயர்களின் முடிபு

ஒன்றாகக் கலந்த இருபொருட் பெயர்கள் அல்லது ஒரே பொருள் குறித்த இருபெயர்கள் ஒருமை வினை கொண்டு முடியும்.

*எ-டு. அவனுக்குத் தயிரும் சோறும் கிடைத்தது.*
*உனக்கு மானம் ஈனம் இருக்கிறதா? (உ.க.இ., I 105)*

## என்ன என்பது ஒருமையில்

*என்ன என்னும் சொல் பன்மைக்குரியது. அதை ஒருமையில் (அது என்ன? என வழங்குவது வழுவமைதி (உ.க.இ., I 106).*

## வினை மரபுகள்

*கண்ணிற்கு மறைந்து நிற்பவரைப் பற்றி வினவும் வினா 'யார் அவர்'? என்றிருத்தல் வேண்டும். 'யார் அது?' என்று வினவுவது வழுவாம்.*

பொதுவாக வினாச்சொற்களுள் யகர வடிவச் சொற்கள் பொதுப்படையான பொருளைப் பற்றியும், எகர வடிவச் சொற்கள் ஒரு குழுவைச் சேர்ந்த பொருளைப் பற்றியும் வினவும்.

| எ.டு. | பொதுப்படையான பொருள் | ஒரு குழுவைச் சேர்ந்த பொருள் |
|---|---|---|
| | *யாவன்* | எவன் - ஆண்பால் |
| | *யாவள்* | எவள் - பெண்பால் |
| | *யாவர், யார்* | எவர் - பலர்பால் |
| | *யாது* | எது, ஏது - ஒன்றன்பால் |
| | *யா, யாவை* | எவை - பலவின் பால் |

*(உ.க.இ., I 108)*

## ஏதேனும், எவையேனும்

ஒரு குறிப்பிட்ட குழுவைச் சேர்ந்த பொருள்களுள் ஒன்றையேனும் பலவற்றையேனும் திட்டமின்றி வினாச் சொல்லாற் குறிப்பின், ஏதேனும் ஒன்று, எவையேனும் இரண்டு எனக் குறித்தல் வேண்டும் *(உ.க.இ., I 109).*

(ஏதேனும் இரண்டு, மூன்று என்றெல்லாம் குறிப்பது வழு)

## கால முடிபு

காலம் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூவகைப்படும். அவற்றுள் ஒவ்வொன்றும் 1. தனிப்பு (Indefinite), 2. தொடர்ச்சி (Continuous), 3. நிறைவு (Perfect), 4. நிறைவுத் தொடர்ச்சி (Perfect Continuous) என 4 உட்பிரிவு கொள்ளும்.

எ.டு.: இறந்தகாலப் பிரிவுகள்

1. நான் எழுதினேன் - தனிப்பு
2. நான் எழுதிக் கொண்டிருந்தேன் - தொடர்ச்சி
3. நான் எழுதியிருந்தேன் - நிறைவு
4. நான் எழுதிக் கொண்டிருந்திருந்தேன் - நிறைவுத் தொடர்ச்சி

நிகழ்காலப் பிரிவுகள்

1. நான் எழுதுகிறேன் - தனிப்பு
2. நான் எழுதிக் கொண்டிருக்கிறேன் - தொடர்ச்சி
3. நான் எழுதிக் கொண்டிருந்திருக்கிறேன்- நிறைவுத் தொடர்ச்சி

எதிர்காலப் பிரிவுகள்

1. நான் எழுதுவேன் - தனிப்பு
2. நான் எழுதிக் கொண்டிருப்பேன் - தொடர்ச்சி
3. நான் எழுதியிருப்பேன் - நிறைவு
4. நான் எழுதிக் கொண்டிருப்பேன் - நிறைவுத் தொடர்ச்சி

இங்ஙனமே ஏனை இடம் பால்களோடும் ஒட்டுக *(உ.க.இ., I 109)*

## தொழிற்பெயர்களின் காலப்பிரிவுகள்

'கை' விகுதித் தொழிற்பெயரும் 'தல்' விகுதித் தொழிற் பெயரும் முக்காலத்திற்கும் பொதுவான ஒரே நான்கு பிரிவுடையவை. 'து'வ் விகுதி தொழிற்பெயர் முக்காலத்திற்கும் வெவ்வேறு நந்நான்கு பிரிவுடையது.

கை விகுதித் தொழிற்பெயர்

1. எழுதுகை - தனிப்பு
2. எழுதிக் கொண்டிருக்கை - தொடர்ச்சி
3. எழுதியிருக்கை - நிறைவு
4. எழுதிக் கொண்டிருந்திருக்கை - நிறைவுத் தொடர்ச்சி

'கை' விகுதித் தொழிற்பெயர் போன்றே 'தல்' விகுதித் தொழிற்பெயரும் வரும்.

### துவ் விகுதித் தொழிற்பெயர்

*இறந்த காலப் பிரிவுகள்*

1. எழுதினது - தனிப்பு
2. எழுதிக் கொண்டிருந்தது - தொடர்ச்சி
3. எழுதியிருந்தது - நிறைவு
4. எழுதிக் கொண்டிருந்திருந்தது - நிறைவுத் தொடர்ச்சி

*நிகழ்காலப் பிரிவுகள்*

1. எழுதுகிறது - தனிப்பு
2. எழுதிக்கொண்டிருக்கிறது - தொடர்ச்சி
3. எழுதியிருக்கிறது - நிறைவு
4. எழுதிக்கொண்டிருந்திருக்கிறது - நிறைவுத் தொடர்ச்சி

*எதிர்காலப் பிரிவுகள்*

1. எழுதுவது - தனிப்பு
2. எழுதிக்கொண்டிருப்பது - தொடர்ச்சி
3. எழுதியிருப்பது - நிறைவு
4. எழுதிக் கொண்டிருந்திருப்பது - நிறைவுத் தொடர்ச்சி

(உ.க.இ., I 116)

## வினையெச்சங்களின் பொருள்கள்

**இறந்தகால வினையெச்சம்:** காரணம், முன்மை ஆகிய இரு பொருள் பற்றி வரும்.

எ-டு. மழை பெய்து பயிர் விளைந்தது - காரணம்
வண்டி வந்து மழை தொடங்கிற்று - முன்மை

**நிகழ்கால வினையெச்சம்:** காரணம், முன்மை, உடனிகழ்ச்சி நோக்கம், விளைவு ஆகிய ஐம்பொருள் பற்றி வரும்.

எ.டு.: மழைபெய்யக் குளம் நிரம்பிற்று - காரணம்
காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்தது - முன்மை
சங்கூத மணியடித்தது - உடனிகழ்ச்சி
பரிசுபெறப் பாடம் படித்தான் - நோக்கம்
கால்நோக வழிநடந்தான் - விளைவு

**எதிர்கால வினையெச்சம்:** காரணம், முன்மை, உடனிகழ்ச்சி, நேர்ச்சி, நிலைப்பாடு (condition), ஐய நிகழ்ச்சி ஆகிய ஆறு பொருள் பற்றி வரும்

எ.டு.: மழை பெய்யின் பயிர்விளையும் - காரணம்
கோழி கூவின் பொழுது விடியும் - முன்மை
முன்கை நீளின் முழங்கை நீளும் - உடனிகழ்ச்சி
ஒரு புதையல் கிடைத்தால் நன்றாயிருக்கும் - நேர்ச்சி
கூலி கொடுத்தால் வேலை செய்வான் - நிலைப்பாடு
வந்தால் வருவான் - ஐயநிகழ்ச்சி (உ.த.இ.), I 120)

## செய்தற்கு என்னும் வினையெச்சம்

செய்தற்கு என்னும் வினையெச்சம் உலக வழக்கில் செய்யாமைக்கு ஏதுவாக என்று பொருள்பட வருவதுமுண்டு.

எ.டு.: யான் போவதற்குக் காலில் கட்டி புறப்பட்டிருக்கிறது.

செய்தற்கு என்னும் வினையெச்சம் 4ஆம் வேற்றுமையேற்ற தொழிற்பெயராதலின், செய்கிறதற்கு, செய்வதற்கு என்னும் வடிவும் கொள்ளும் (உ.த.இ.), I 123).

## ஒப்பீட்டுத் தரங்கள் (Degrees of Comparison)

பொருள்களைக் குணங்களில் ஒன்றோடொன்று ஒப்பிடும்போது கவனிக்கப்படும் தரங்கள் மூன்று. அவை:

1. ஒப்புத்தரம் (Positive Degree)
2. உறழ்தரம் (Comparative Degree)
3. உச்சத்தரம் (Superlative Degree)

என்பன.

எ–டு. காக்கையைப் போல் கரியது களம்பழம் (ஒப்புத்தரம்)
அமைச்சனை விட அரசன் பெரியவன் (உறழ்தரம்)
அறநூல்களிற் சிறந்தது திருக்குறள் உச்சத்தரம்

*(உ.க.இ., I 124)*

## இலக்கணப்போலி

இலக்கணம் சிறிது தவறியும் இலக்கணமுடையது போல வழங்கும் சொல்லும் சொற்றொடரும் இலக்கணப் போலி வழக்காம்.

எ.டு.: விசிறி → சிவிறி (எழுத்துமுறை மாற்று)
கோவில் → கோயில் (உடம்படுமெய்ம் மாற்று)
நகர்ப்புறம் → புறநகர் - சொன்முறை மாற்று *(உ.க.இ.II. 1)*.

## ஒருபொருட் பல சொற்கள்

ஒரு பொருள் பற்றிப் பல சொற்கள் வழங்கலாம்; அல்லது வழங்குவதாகத் தோன்றலாம். அவையெல்லாம் பருப்பொருளில் ஒத்தனவேயன்றி, நுண் பொருளில் ஒத்தனவல்ல. சொல்லுதலைக் குறிக்கப் பல சொற்கள் உள. அவற்றின் நுண்பொருள் வருமாறு:

சொல்லுதல் - ஒருவனிடம் பொதுவாக ஒன்றைத் தெரிவித்தல்.

பேசுதல் - ஒரு மொழியைக் கையாளுதல்

கூறுதல் - ஒன்றைக் கூறுபடுத்தி அல்லது வகைப்படுத்திச் சொல்லுதல்

| | | |
|---|---|---|
| சாற்றுதல் | - | முக்கியமான செய்தியைப் பொதுமக்கட்கறிவித்தல் |
| மொழிதல் | - | ஒவ்வொரு சொல்லையும் தெளிவாய்ச் சொல்லுதல் |
| என்னுதல் | - | ஒருவன் கூற்றைத் தெரிவித்தல் |
| கிளத்தல் | - | ஒரு பொருளைக் குறிப்பிட்டுச் சொல்லுதல் |
| பன்னுதல் | - | பல பொருள்களுள் ஒவ்வொன்றையும் தனித்தனியே குறித்துச் சொல்லுதல் |
| நுவலுதல் | - | ஒரு சொல்லை அல்லது சொற்றொடரைப் பலகாலும் ஓதிப் பயிலுதல் |
| உரைத்தல் | - | நூலுக்கு உரை கூறுதல் அல்லது ஒன்றை விளக்கிச் சொல்லுதல் |
| நவிலுதல் | - | ஒரு சொல்லை அல்லது சொற்றொடரைப் பலகாலும் ஓதிப் பயிலுதல் |
| பகர்தல் | - | ஒரு பொருளின் விலையைச் சொல்லுதல் |
| நொடித்தல் | - | கதை அல்லது வரலாறு சொல்லுதல் |
| செப்புதல் | - | ஒரு வினாவிற்கு விடை சொல்லுதல் |
| அறைதல் | - | ஒன்றை உரக்க அல்லது வலியுறச் சொல்லுதல் |
| மாறுதல் | - | உரையாட்டில் மாறிமாறிச் சொல்லுதல் |
| விள்ளுதல் | - | ஒன்றை வெளிவிட்டுச் சொல்லுதல் |
| விளம்புதல் | - | ஒன்றைப் பலர்க்கு அறிவித்தல் |
| புகலுதல் | - | ஒன்றை விரும்பிச் சொல்லுதல் |
| இசைத்தல் | - | ஒன்றைக் கோவை பட அல்லது ஒழுங்குபடச் சொல்லுதல் |
| கழறுதல் | - | கடிந்து சொல்லுதல் |
| இயம்புதல் | - | இன்னிசையுடன் சொல்லுதல் |
| கரைதல் | - | அழுது கொண்டு அல்லது இரங்கிச் சொல்லுதல் |

இங்ஙனமே ஏனைச் சொற்களின் நுண்பொருள்களையும் அறிந்து கடைப்பிடிக்க *(உ.க.இ., II. 24).*

## புதிய தொழிற்பெயர் விகுதிகள்

(ஆறுமுக நாவலர் முதலியோர் எழுதிய நன்னூற் காண்டிகை உரை முதலியவற்றில் தொழிற்பெயர் விகுதிகளாக, தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, உ, தி, சி, வி, உள், காடு, பாடு, அரவு, ஆனை, மை, து என்னும் பத்தொன்பதை மட்டுமே கூறியுள்ளனர். ஆனால் பாவாணர் கூறும் தொழிற் பெயர் விகுதிகள் முப்பது. மேற்கண்டவற்றில் கு, பாடு என்பவற்றைப் பாவணர் கூறவில்லை. பிறவற்றுடன் புதியனவாக, கல், தை, இ. இல், ஆல், அனை, அனம், அணம், அடம், அகம், அரம், இயம், பாணி ஆகிய பதின்மூன்று விகுதிகளைப் பின்வருமாறு எடுத்துக்காட்டுகளுடன் கூறுகின்றார்.)

கல் - கொடுக்கல்
தை - நடத்தை
இ - வெகுளி
இல் - எழில்
ஆல் - எழால்
அனை - வஞ்சனை
அனம் - கண்டனம்
அணம் - கட்டணம்
அடம் - கட்டடம்
அகம் - வஞ்சகம்
அரம் - விளம்பரம்
இயம் - கண்ணியம்
பாணி - சிரிப்பாணி

இவற்றுள், அம் அல் முதலிய விகுதிகள் அகரம் கெட்டும் நிற்கும் என்று கூறிப் பின் வரும் எடுத்துக்காட்டுகளைத் தருகின்றார்.

மண + அம் = மணம். சீவ + அல் = சீவல்

ஒரு வினை பல விகுதிகளை ஏற்பின், விகுதி தோறும் வேறு பொருள் தோன்றும் என்று கூறிப் பின்வரும் காட்டுகளைத் தருகின்றார்.

கற்றல் - படிக்கும் தொழில்
கற்கை - படிப்பு
கல்வி - வித்தை (Education)
கலை - சாத்திரம்
கற்பு - மாதர் ஒழுக்கம்

முதனிலை திரிந்து விகுதிபெற்ற தொழிற்பெயர்களுக்கு இவர் காட்டும் சில காட்டுகள் புதியன. அவையாவன:

படி + அம் = பாடம்
தவி + அம் = தாவம் (தாகம் - போலி) *(இயற். இலக். 15, 16)*

## 'படர்க்கை' என்பதன் பெயர்க் காரணம்

தன்மை முன்னிலை இரண்டையும் தாண்டிப் படர்வது படர்க்கை. படர்தல் - செல்லுதல் *(இயற்.இலக்.18).*

## அசையுருபும் சொல்லுருபும்

வேற்றுமையுருபு அசையாகவும் சொல்லாகவுமிருக்கும். இவை முறையே அசையுருபென்றும், சொல்லுருபென்றும் கூறப்படும். சொல்லுருபு தனித்தும் வரும். அசையுருபு தனித்து வாராது. பெயரைச் சார்ந்தே வரும். *(இயற்.இலக்.22)*

பாவாணர் கூறும் இப்பாகுபாட்டுக்குப் பின்வருமாறு காட்டுத் தரலாம்.

கத்தியை = கத்தி + ஐ - ஐ அசையுருபு

கத்திகொண்டு = கத்தி + கொண்டு - கொண்டு சொல்லுருபு 'கொண்டு' தனித்தும் வருவது போல் 'ஐ' தனித்து வாராமை காண்க.

## முதல் வேற்றுமைக்கு உருபு உண்டா?

முதல் வேற்றுமைக்கு உருபில்லாதிருப்பவும், ஆனவன், ஆனவள், ஆனவர், ஆனது, ஆனவை என்கின்ற ஐம்பாற் பெயர்களையும், என்பவன், என்பவர், என்பது, என்பன என்னும் ஐம்பாற்பெயர்களையும் உருபாகக் காட்டுவர். அவை முறையே ஆ, என் என்னும் வினைகளின் அடியாகப் பிறந்த வினையாலணையும் பெயர்களேயன்றி உருபுகளாக ஆனவன் முதலிய ஐம்பாற் பெயர்களும் திணை, பால், எண், இடம் காட்டிட ஆனவனை, ஆனவனால், என்பவனை, என்பவனால்

என வேற்றுமை யேற்றுவரும். இவ்விலக்கணக் கணங்கள் பெயருக்கே யன்றி வேற்றுமையுருபிற்கில்லை. வேற்றுமை யுருபுகள் பெயரைச் சார்ந்தல்லது தனித்து வாராத இடைச் சொற்கள். மேலும் ஆனவன் முதலிய ஐம்பாற்பெயரும் படர்க்கையெழுவாய்கட்கே பொருந்துவதன்றித் தன்மை, முன்னிலை, எழுவாய்கட்குப் பொருந்தாமையுணர்க. முதல் வேற்றுமைக்கு உருபு இன்றேனும், பிற வேற்றுமைகளினின்றும் வேறுபடுவதனால் வேற்றுமை எனப்படுகிறது. *(இயற்.இலக். 23)*

(தனிப் பெயர் என்பதிலிருந்து எழுவாய் என்ற நிலைக்கு வேறுபடுத்துவதால் எழுவாய் வேற்றுமை முதல் வேற்றுமை எனப்பட்டது எனப் பிறர் காரணம் கூறுவர்.)

## கோளி வேற்றுமை

நான்காம் வேற்றுமைக்குப் பல பொருள் இருப்பினும், கொடைச் சிறப்புப்பற்றிக் கொடை வேற்றுமை எனக் கூறப்படும். கொடையிலும் கொடுப்போனைக் குறியாது கொள்வோனையே குறித்தலால், கோளி வேற்றுமை என்றும் கூறப்படும். கோளி - கொள்பவன் *(இயற்.இலக்.23).*

## இடைச்சொற்களின் வகை

இடைச்சொற்கள் எழுத்து, அசை, சொல் என்னும் மூவகையாக இருக்கும் (இவற்றுக்குப் பின்வருமாறு காட்டுத் தரலாம்).

எழுத்து - ஐ, கு, ஒ
அசை - ஆல், ஆன், அர்
சொல் - ஐயோ, அந்தோ, போல *(இயற்.இலக்.40)*

## ஞி' மொழி முதலில் வரும்

மிஞிறு (வண்டு) என்னும் சொல், இலக்கணப் போலியாகி 'ஞிமிறு' என நிற்கும் போது, ஞகரம் இகரத்தோடும் கூடி மொழி முதலில் வருவதாகக் கொள்ளலாம். *(இயற்.இலக். 53).*

*(ஞகரம் அ, ஆ, எ, ஒ என்னும் நான்கு உயிருடன் மட்டுமே கூடி மொழி முதல் வரும் என்று இலக்கண நூல்கள் கூறுகின்றன. எனவே பாவாணர் அந்நான்கு உயிருடன் புதியதாக இகரத்தையும் சேர்த்துச் சொல்லலாம் என்கிறார்.)*

## ஆகுபெயரில் புதிய வகைகள்

*(பொருள், இடம், காலம், சினை, பண்பு, தொழில், அளவை, சொல், தானி, கருவி, காரியம், கருத்தா, உவமையாகு பெயர் வகைகளை இலக்கண நூல்கள் கூறுகின்றன. பாவாணர் புதிய ஆகுபெயர் வகைகள் சிலவற்றைக் கூறுகிறார். அவை வருமாறு)*

**பண்பியாகு பெயர் :** ஒரு பண்பியின் பெயர் அதன் பண்பிற்கு ஆகி வருவது. எ.டு.: சாம்பல் வாழை. சாம்பல் என்னும் பண்பிப் பெயர் அதன் பண்பாகிய நிறத்துக்கு ஆகிவந்தது.

**சின்னவாகு பெயர் :** ஒரு சின்னத்தின் பெயர் அதையுடைய ஆளுக்கு அல்லது தொழிலுக்கு ஆகி வருவது. எ.டு.: 'உலகமெல்லாம் ஒரு குடைக்கீழ் ஆண்டான்' என்பதில் குடை என்ற சின்னம் அதனையுடைய அரசிற்கு ஆகி வந்தது. *(இயற்.இலக்.106).*

## ஆறாம் வேற்றுமை உருபுகள்

ஆறாம் வேற்றுமை உருபுகளில் அது, ஆது என்பன ஒருமைக்கும், அ என்பது பன்மைக்கும் பண்டைக் காலத்தில் வழங்கிய வழக்கு இக்காலத்தில் இறந்துபட்டது *(இயற்.இலக்.111)*

*(பாவாணர் இவ்வாறு கூறினும் அது, ஆது ஆகியன இன்று பன்மையில் வந்ததற்கோ, அ என்பது ஒருமையில் வந்ததற்கோ சான்று தரவில்லை. தாமும் அவ்வாறு ஆளவில்லை)*

## புலம்பல் விளி

புலம்பலில் விளித்தல் புலம்பல் விளி என்று கூறப்படும். புலம்பல் விளிக்கு ஓ மிகுவது சிறப்பாகும் *(இயற்.இலக்.106).*

(பாவாணர் கூறும் புலம்பல் விளிக்கு,

*அரனிருந்த மலையெடுத்த அண்ணாவோ அண்ணாவோ!*
*(கம்பராமாயணம்- 2840)*

என்பதைக் காட்டாகக் காட்டலாம்).

## ஏவலுக்கும் பகுதிக்கும் வேறுபாடு

ஏவலொருமை வினைமுற்று விகுதிபெற்றும், விகுதி பெறாமற் பகுதியளவாயும் இருவகையாய் நிற்கும்.

எ.டு.: வாராய், வருதி - விகுதி பெற்றது
வா - பகுதியளவாய் நின்றது

ஏவற்பன்மை வினைமுற்று, விகுதி பெற்றே நிற்கும்.

எ.டு.: வாரும், வாருங்கள்
வாரீர், வருதிர், வம்மின், வம்மின்கள்

பகுதியளவாய் நிற்கும் ஏவலொருமை வினைமுற்றும், வினைப்பகுதியும் வடிவிற் பெரும்பாலும் ஒத்திருப்பினும் பிறவகையிற் பெரிதும் வேறுபடுவனவாகும்.

1. ஏவல்வினை எடுத்தலோசையாற் கட்டளையை உணர்த்தும் வினைப்பகுதி படுத்தலோசையால் தொழிலை உணர்த்தும்.

2. ஏவல்வினை என்றும் வேறுபடாதிருக்கும். வினைப்பகுதி சிறுபான்மை வேறுபடும்.

| எ.டு.: | ஏவல்வினை | வினைப்பகுதி |
|---|---|---|
| | வா | வருகிறான் |
| | காண் | கண்டான் |

3. ஏவல்வினை தனித்து வரும். வினைப்பகுதி விகுதி முதலிய பிற உறுப்புகளோடு சேர்ந்து வரும் *(இயற்.இலக்.116)*

## 'தான்' என்னும் இடைச்சொல்

தான் என்னும் இடைச்சொல் அசைநிலை, பிரிநிலை, தேற்றம் எனும் மூன்று பொருள்களில் வரும்.

எ.டு.: 'தாழுமவர் தம்மடிக்கீழ்த் தான்'

இதில் தான் என்பது வேறுபொருளின்றி அசையாய் நிற்றலின் அசைநிலை.

அவன்தான் செய்தான் - இதில் தான் என்பது ஒரு கூட்டத்தாருள் ஒருவனைப் பிரித்து நிற்றலின் பிரிநிலை.

வரத்தான் செய்வான் - இதில் உறுதியாய் வருவான் என்று பொருள்படுதலின் தான் என்பது தேற்றப் பொருளில் வந்தது. *(இயற்.இலக்.119).*

## பண்பாட்டுப் பாதுகாப்பு - தமிழ் எண்கள்

தமிழன் தன் பண்பாட்டுக் கூறுகளைக் கால அடைவில் ஒவ்வொன்றாக இழந்து வருகிறான். இதற்குக் காரணம் அவன் தொடர்ந்து பல நூற்றாண்டுகளாக அயலாருக்கு அடிமை செய்து வாழ்ந்து வருவதே. விடுதலை பெற்ற இன்றும், இறுதியாக அவன் குருதியில் ஊறிப்போன ஆங்கில அடிமை உணர்வு காரணமாக ஆங்கிலத்தையே தன் வாழ்வில் எல்லா நிலைகளிலும் தலைமேல் வைத்துக் கொண்டாடி வருகிறான். இவ்வகையில் இன்று மறைந்து போன தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகளில் ஒன்று தமிழ் எண்கள். 50 ஆண்டுக்கு முன் வெளியிடப்பட்ட நூல்களில் தமிழ் எண்களையே பக்கங்களிற் குறித்தனர். இன்று தமிழ் கற்பிப் போர்க்கே தமிழ் எண்கள் தெரியவில்லை என்ற அவலநிலை ஏற்பட்டுவிட்டது.

**௰, ௰௧, ௨௰, ௱, ௱௧, ௲, ௲௧** என்று அன்று எழுதப்பட்ட தமிழ் எண் வடிவங்களை, இன்று பத்தடிமான முறையில் மாற்றி முறையே **௧0, ௧௧, ௨0, ௧00, ௧0௧, ௧000, ௧00௧** என்று எழுதுவதைப் பாவாணர் உடன்படுகிறார். அதனுடன் தமிழில் (வேறு மொழிகளில் இல்லாத அளவு) மிகவும் விரிவாகவும், தனித்தனிப் பெயர்களுடனும் இருக்கும் கீழ்வாய் இலக்கங்கள் (பின்னங்கள்) சிலவற்றின் எண் வடிவங்களையும், அவற்றின் பெயர்களையும் பின்வருமாறு எழுதிக்காட்டுகின்றார்.

| | |
|---|---|
| 1/16 - ~ | மாகாணி, வீசம் |
| 1/8 - ஞு | அரைக்கால் |
| 3/16 - ங | முண்டாணி |
| 1/4 - வ | கால் |
| 1/2 - இ | அரை |
| 3/4 - ஙூ, தெ | முக்கால் |

*(கட்.வரை. VIII)*

## தமிழில் கலந்துள்ள பிறமொழிச் சொற்களை அறிய ஒரு வழி:

நம் தமிழிலக்கணத்தை நன்றாகத் தெரிந்து கொண்டாலே பிற மொழிச் சொற்கள் எவை என்று அறிந்து அவற்றை விலக்க முடியும் என்கிறார். தமிழில் மொழிக்கு முதலிலும் இறுதியிலும் இன்ன இன்ன எழுத்துகள் தாம் வரும் என்ற வரையறை உண்டு. மொழிகளின் இடையில் இன்ன எழுத்துக்குப் பக்கத்தில் இன்ன எழுத்து வரும் இன்ன எழுத்து வாராது என்ற வரையறை உண்டு. இந்த வரையறைகளுக்கு மாறாக வருவனவெல்லாம் பிறமொழிச் சொற்கள் என்று எளிதாகக் கண்டு கொள்ளலாம். இப்படியும் அறிந்து கொள்ள முடியாமல் தமிழ் ஒலி மரபிற்கேற்ப இருக்கும் சொற்கள் சில உண்டு. அவை கமலம், குங்குமம் போன்றவை. பின்வருவன அவர் கூறும் முறையில் பிற மொழிச் சொல் என்று அறிந்து கொள்ளத்தக்கவை.

டிக்கட் - தமிழில் மொழி முதலிலும் இறுதியிலும் வாராத டகரம் வருதலின் தமிழன்று.

விக்நம் - க்ந என்னும் எழுத்துகள் தமிழில் அடுத்தடுத்து நில்லா. ஆதலின் இது தமிழ்ச் சொல் அன்று.

அர்த்தம் - தமிழில் தனிக்குறிலை அடுத்து இடையின ரகரம் வாராது ஆதலின் இது தமிழ்ச் சொல் அன்று. *(கட்.வ.3)*

## 5ஆம் வேற்றுமை உருபுகளின் வடிவம்

நின்று, இருந்து என்னும் சொற்களை 5ஆம் வேற்றுமை உருபுகளாகத் தமிழிலக்கணங்கள் கூறுகின்றன. ஊரினின்று

என்பதை ஊர் + இன் + நின்று என்று பிரித்து, நின்று 5ஆம் வேற்றுமை உருபு; இன்- சாரியை என்பார்கள். ஊரிலிருந்து என்பதை ஊர் + இல் + இருந்து என்று பிரித்து, இருந்து 5ஆம் வேற்றுமை உருபு, இல் - சாரியை என்று சொல்ல வேண்டும். அதனால் பாவாணர் இவற்றில் உள்ள பெயர்களைப் பிரித்து, எஞ்சிய இனின்று, இலிருந்து என்ற சொற்களை 5ஆம் வேற்றுமை உருபுகளாகக் கூறுகின்றார். *(கட்.வ.35)*

## 'செய்ய மாட்டுவேன்' என்ற வடிவம்

'செய்ய மாட்டேன்' என்பதற்குச் 'செய்வேன்' என்பதை எதிர் மறையாக இன்று சொல்கிறோம். பாவாணர் 'செய்ய மாட்டேன்' என்பதற்குச் 'செய்ய மாட்டுவேன்' என்பதே எதிர்மறை என்கிறார். *(கட்.வ.42).*

## மெய்ம்மயக்கம் – தனிமொழிக்கும் புணர்மொழிக்கும் பொதுவே

தமிழ்மொழியில் இன்ன எழுத்தை அடுத்து இன்ன எழுத்து வரும்; இன்ன எழுத்து வாராது என்ற வரையறையைக் கூறுவது 'எழுத்து மயக்கம்' என்ற பகுதி. இம்மயக்கம் மெய் யெழுத்துகளுக்கே கூறப்படும்; உயிருடன் உயிர், உயிருடன் மெய், மெய்யுடன் உயிர் ஆகிய மயக்கங்களுக்கு வரையறை கூறப்படுவதில்லை. மெய்ம்மயக்கங்களில் சில தனிமொழியில் வாராமல், புணர்மொழியில் வருவதுண்டு. ஆனால் தொல்காப்பியர், இது தனிமொழியில் வரும்; இது புணர் மொழியில் வரும் என்று சுட்டிக் கூறவில்லை. இருமொழி களுக்கும் பொதுவாகவே மயக்கவிதி கூறினார். ஆனால் நச்சினார்க்கினியர் அம்மயக்க விதிகளைத் தனிமொழிக்கே உரியன .என்று கொண்டார். எனினும் சில மயக்கங்களுக்கு அவரால் தனிமொழி எடுத்துக் காட்டுகள் காட்ட இயலவில்லை; புணர்மொழிகளையே காட்டி, "ஒரு மொழிக்கண் வரும் சொற்கள் இக்காலத்தில்லை, அக்காலத்துள்ளன போலும்" என்றார். இவரைப் பின்பற்றிய சுப்பிரமணிய சாத்திரியார் ல்ய, வ்ய முதலிய மெய்கள் மயங்கும் சொற்கள் பண்டைத் தமிழில்

இருந்தன என்று கூறினார்.அதைப் பாவாணர் பின்வருமாறு மறுக்கிறார்.

தொல்காப்பிய நூன்மரபில்,

**லளஃகான் முன்னர் யவவும் தோன்றும்** (24)

**ணனஃகான் முன்னர்க்**
**க ச ஞ ப ம ய வ அவ்வேழும் உரிய** (26)

**ஞ ந ம வ என்னும் புள்ளி முன்னர்**
**யஃகான் நிற்றல் மெய்பெற் றன்றே** (27)

**மஃகான் புள்ளிமுன் வவ்வும் தோன்றும்** (28)

என்னும் நூற்பாக்களைப் பிறழ உணர்ந்து பண்டைத் தமிழ்ச் சொற்களிடையில் ல்ய, ல்வ, ள்ய ள்வ, ண்ய, ண்வ, ன்ய, ன்வ, ஞ்ய, ந்ய, ம்ய, வ்ய, ம்வ என்னும் இணைமெய்கள் பயின்றதாகக் கூறியுள்ளார் (பண்டாரகர் சுப்பிரமணிய சாத்திரியார்) இவர் இங்ஙனம் துணிவதற்குக் காரணம் என்னவெனில், நச்சினார்க்கினியர் மேற்கூறிய நூற்பாக்களுள் முதலதற்கு எடுத்துக்காட்டு! கொல்யானை, வெள்யாறு, இவற்றுட் கொல் யானை என வினைத்தொகையும் வெள்யாறு எனப் பண்புத் தொகையும் நிலைமொழி வருமொழி செய்வதற்கு இயையாமையின், மருவின் பாத்திய' என்று கூறுவராதலின், இவ்வாசிரியர் இவற்றை ஒரு மொழியாகக் கொள்வரென்று உணர்க. இக்கருத்தானே மேலும் வினைத்தொகையும், பண்புத் தொகையும் ஒரு மொழியாகக் கொண்டு உதாரணம் காட்டுதும்" என்று கூறினார். பின்பு, "அன்றி இவ்வாசிரியர் நூல் செய்கின்ற காலத்து, வினைத்தொகைக் கண்ணும் பண்புத்தொகைக் கண்ணுமன்றி, ஒரு மொழிக்கண்ணே மயங்குவனவு முளவாதலின், அவற்றைக் கண்டு இலக்கணம் கூறினார். அவை பின்னர் இறந்தனவென்று ஒழித்து உதாரணமில்லன வற்றிற்கு உதாரணங் காட்டாமற் போதலே நன்றென்று கூறலுமொன்று என்றும், மூன்றாவதற்கு,

"இங்ஙனம் ஆசிரியர் சூத்திரஞ் செய்தலின், அக்காலத்து ஒரு மொழியாக வழங்கிய சொற்கள் உளவென்பது பெற்றாம்.

அவை இக்காலத்து இறந்தன. இனி, உரையாசிரியர் உரிஞ்யாது, பொந்யாது, திரும்யாது, தெவ்யாது என இருமொழிக் கண் வருவன உதாரணமாகக் காட்டினாராலெனின், ஆசிரியர் ஒருமொழியாமாறு ஈண்டுக்கூறி, இருமொழி புணர்த்தற்குப் புணரியல் என்று வேறோர் இயலுங் கூறி, அதன் கண் 'மெய்யிறு சொன்முன் மெய் வரு வழியும்' (எழு. 107) என்று கூறினார். கூறியவழிப் பின்னும் 'உகரமொடு புணரும் புள்ளியிறுதி' (எழு. 163) என்றும் பிறாண்டும் ஈறுகடோறும் எடுத்தோதிப் புணர்ப்பர் ஆதலின், ஈண்டு இருமொழிப் புணர்ச்சி காட்டின் கூறியது கூறல் என்னும் குற்றமாம் அதனால் அவை காட்டுதல் பொருந்தாமை உணர்க" என்றும், நாலாவதற்கு,

"இதற்கும் உதாரணம் இக்காலத்து இறந்தன. அன்றி வரும் வண்ணக்கன் என்றாற் போல்வன காட்டின், வகாரமிசையும் மகாரம் குறுகும் (எழு. 330) என்ற விதி வேண்டாவாம்" என்றும் கூறினதேயாம். இக்கூற்றுக்குக் காரணம் நச்சினார்க்கினியர் தொகைச் சொல்லை (Compound word) ஒரு சொல்லாகக் கொள்ளாமையும் கூறியது கூறலுக்கும் வழிமொழிதலுக்கும் வேறு பாடறியாமையுமேயாகும்.

எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய *(எச்ச. 24)*

என்றார் தொல்காப்பியர். தண்ணீர், புன்செய், மண் கொண்டான், பிழை பொறுத்தான் முதலிய தொகைப் பெயர்கள் எல்லாம் ஒரு சொல் நடையவாதல் காண்க.

நெசுபீல்டு (Nesfield) என்பவர், தம் ஆங்கில இலக்கணப் புத்தகத்தில் 'ஒரு சொல் தன்மையடையும்படி இருசொல் புணர்ந்தது தொகைச் சொல்' என்று கூறி Ink-pot (மைக்கூடு), Door-step (படிக்கட்டு), horse-shoe (குதிரைக் குளம்பாணி), Drinking water (குடிநீர்) என்று உதாரணத்தில் காட்டினார்.

இனி, நச்சினார்க்கினியர் கொள்கைப்படி கொள்ளின், கூறியது கூறலாகத் தொல்காப்பியத்தில் எத்தனையோ நூற்பாக்கள் இருக்கின்றன.

**புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே**
**உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்**

என்று நூன்மரபிற் கூறியதை

**யகரம் வருவழி இகரம் குறுகும்**
**உகரக் கிளவி துவரத் தோன்றாது**

எனக் குற்றியலுகரப் புணரியலுள்ளும்,

**மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்**

என்று நூன் மரபிற் கூறியதை

**மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்**

என்று புணரியலுள்ளும்,

**உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயரென்**
**றாயிரண் டென்ப பெயர்நிலைச் சுட்டே**

என்று புணரியலிற் கூறியதை,

**உயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே**
**அஃறிணை யென்மனார் அவரல பிறவே**

எனக் கிளவியாக்கத்துள்ளும்

**இடைப்படிற் குறுகும் இடனுமார் உண்டே**
**கடப்பா டறிந்த புணரிய லான**

என்று மொழிமரபிற் கூறியதை,

**வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழித்**
**தொல்லை இயற்கை நிலையலும் உரித்தே**

என்று குற்றியலுகரப் புணரியலுள்ளும் கூறியிருப்பதைக் காண்க

நச்சினார்க்கினியர் எவ்வளவோ தமிழ்ப் பற்றும் தமிழறிவும் உடையவராயிருந்தும், இங்குத் தவறிவிட்டது தமிழியல்பை அறியாததினாலேயே' என்று கூறுகிறார் (ஒப்.மொழி, பக். 69-72)

இதிலிருந்து தொல்காப்பியர் கூறிய மெய்ம்மயக்கங்கள் ஒருமொழி, புணர்மொழி ஆகிய இரண்டுக்கும் உரியன என்பதே பாவாணர் கொள்கை என்பது தெளிவாகிறது. மெய்ம்மயக்கம் தனிமொழிக்கு மட்டுமே உரியது என்று கொண்டு பால்யம், காவ்யம், புண்யம் என்று வருகின்ற ஒரு மொழி மயக்கங்கள், தமிழுக்குரியனவே என்று நச்சினார்க்கினியரும், சுப்பிரமணிய சாத்திரியாரும் நிறுவ முயல்கின்றனர் என்று பாவாணர் கூறுகின்றார்.

பாவாணரின் இவ்விளக்கத்தினால், ல்ய, ண்ய, ன்ய, ந்ய, ம்ய, வ்ய, ம்வ என்னும் மயக்கங்கள், பல்யானை, புண் யாக்கை, கான்யாறு, வெரிந் யாது, மரம்யாது, அவ்யாவை, தரும் வளவன் போன்ற புணர்மொழிகளில் மட்டுமே வரும்; தனி மொழிகளில் வாரா என அறிகிறோம். எனவே, இம்மயக்கங்களையுடைய பால்யன், கண்யம், சன்யாசி, அந்யம், காம்யம், காவ்யம், சம்வாதம் போன்ற தனி மொழிகள் தமிழல்ல என்றறிந்து விலக்க வேண்டும்.

## சகரம் மொழி முதலாகும்

சகரமெய் அகர, ஐகார, ஒளகாரங்களோடு கூடி மொழிக்கு முதலில் வாராது என்று பின்வரும் தொல்காப்பிய நூற்பாக் கூறுகிறது.

**சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே**
**அ ஐ ஒள வெனும் மூன்றலங் கடையே**

*(மொழிமரபு. 28)*

இந்நூற்பாவுக்கு உரைகூறும் இளம்பூரணர் சகரத்தை முதலாகப் பெற்று வரும் தமிழ்ச் சொற்கள்,

**கடிசொல் இல்லை காலத்துப் படினே**

*(தொல்.சொல். 452)*

என்பதனாற் கொள்க என்றார். அவை சம்பு, சள்ளை என்றும் காட்டினார்.

சேனாவரையர், சம்பு, சள்ளை, சட்டி, சமழ்ப்பு என வரும். இவை தொன்றுதொட்டு வந்தனவாயின் முதலாகாதன

வற்றின்கண், 'சகரக்கிளவியும்........... கடையே' என விலக்கார் ஆசிரியர்; அதனான், அவை பிற்காலத்துத் தோன்றிய சொல்லேயாகும் என்பது என்றனர்.

நச்சினார்க்கினியரும் இவ்வாறே கூறினார்.

மயிலைநாதர்,

> **சரிசமழ்ப்புச் சட்டி சருகு சவடி**
> **சளிசகடு சட்டை சவளி – சவிசரடு**
> **சந்து சதங்கை சழக்காதி யீரிடத்தும்**
> **வந்தனவாற் சம்முதலும் வை** *(நன். 105)*

என்றனர். இலக்கண விளக்க நூலார் சகரம் ஐகாரம், ஔகாரம் ஆகிய இரண்டொடு மட்டும் வாராது என்றார். நன்னூலாரும் பிரயோகவிவேக நூலாரும் சகரம் அ, ஐ, ஔ ஆகிய மூன்றுடனும் வரும் என்பர்.

சிவஞான முனிவர், 'அ ஐ ஔ வெனும் மூன்றலங்கடை என்பது முதலாக இவ்வெழுத்துக்களை மொழிக்கு முதலாகா வென ஆசிரியர் தொல்காப்பியனார் விலக்கினமையின், இவ் வட மொழிகளும் திசைச் சொற்களும் அக்காலத்திவ்வாறு தமிழின்கட் பயின்று வாராமை பெறுதும்' என்றனர் *(இலக்கண விளக்கச் சூறாவளி. எழு. 27).*

ஆனால், சகடம், சடை, சண்பகம், சதுக்கம், சந்தம், சந்தனம், சந்தி, சந்து, சமம், சமன், சமைப்பு, சலம், சவட்டி முதலிய சகர முதற்சொற்கள் திருமுருகாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மதுரைக் காஞ்சி, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம், நற்றிணை, குறுந்தொகை, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய சங்க நூல்களில் காணப்படுகின்றன.

ஆனால் பாவாணர், சகரமுதற்சொற்கள் தொல்காப்பியர் காலத்திலேயே இருந்தன; எனவே, தொல்காப்பியம் சகரம் மொழி முதல் வாராது என்பது வழுவே என்று கூறி,

'இனி, சகரக் கிளவி பற்றித் தொல்காப்பியர் மீது வழுவைச் சுமத்தாது, ஏட்டிலிருந் தெழுதினோர் மீது சுமத்துவர் துடிசை கிழார் அ. சிதம்பரனார் அவர் கூறுமாறு:

**க த ந ப ம எனும் ஆவைந் தெழுத்தும்**
**எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே**

*(மொழி. 28)*

**சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே**
**அ ஐ ஔ வெனும் மூன்றலங் கடையே'** (மொழி.)

இவ்விரண்டும் சூத்திரங்களும் ஆதியில், அதாவது ஏட்டுச் சுவடியில் இருக்கும் காலத்து, ஒரே சூத்திரமாகத் திகழ்ந்தன. சுவடியில் உள்ளபடி ஈண்டுத் தருவாம்.

க த ந ப எனு மானவந் தெழுத்தும்
எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே
**சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே**
**அவை ஔ என்னும் ஒன்றலங் கடையே**

'க் த் ந் ப் ம் என்னும் ஐந்து மெய்யெழுத்துகளும் எல்லா உயிரெழுத்துகளோடும் கூடிப் பெருவரவிற்றாய் மொழிக்கு முதலாக வரும். ச் என்ற மெய்யெழுத்தும் அவ்வைந்து மெய்யெழுத்துகளைப் போலவே, சிறு வரவிற்றாய் எல்லா உயிரெழுத்துகளோடும் கூடி மொழிக்கு முதலாக வரும்.

ஆனால் க் ச் த் ந் ப் ம் என்ற ஆறு மெய்யெழுத்துகளும் ஔ என்னும் உயிரெழுத்தோடு கூடி மாத்திரம் மொழிக்கு முதலாக வாரா' என்பதாம்.

எ.டு. நாய் கவ்விற்று (கௌவிற்று என வராது) என்பது. இங்ஙனமே ஏனை மெய்கட்கும் அவர் காட்டுக் காண்பித் துள்ளார். இவ்வுரையும் பொருத்தமாகவே தோன்றுகிறது.

இக்காலத்துத் தமிழ்ப் பேராசிரியர் சிலர், பண்டைத் தமிழிலக்கணங்களெல்லாம் செய்யுள் நடைமொழிக்கே

ஏற்பட்டவை என்றும், பண்டைத் தமிழிலக்கிய மெல்லாம் செய்யுள் நடையில் இருந்ததனால், அதில் பல உலக வழக்குச் சொற்கள் இடம்பெறவில்லையென்றும் அறியாது தொல்காப்பியரைக் கடக்கும் அல்லது தப்புவிக்கும் முகமாக, அவர் காலத்திற்கு முன் சகரமுதற் சொற்களே தமிழில் இல்லையென்று, தாம் மயங்குவதோடு தமிழ் மாணவரையும் மயக்கி வருகின்றனர். தொல்காப்பியம் ஓர் இலக்கண நூலேயன்றி அகரமுதலியன்று. ஆதலால் அதில் ஒரு சொல் இல்லாவிடின், அது தமிழிலேயே இல்லை என்பது மொழியறிவும் உலக வழக்கறிவும் இன்மையையே காட்டும். சகர முதற் சொற்கள் இலக்கிய வழக்கில் மட்டுமன்றி உலக வழக்கிலும் ஏராளமாய் உள்ளன. உலக வழக்குச் சொற்கள் தமிழுக்கு இன்றியமையாதன வாகவும், அதன் சொல் வளத்தைக் காட்டுவனவாகவும், தொன்று தொட்டு வழங்கி வருவனவாகவும் இருக்கின்றன. அவற்றுட் பலவருமாறு:

| | | |
|---|---|---|
| சக்கட்டி | சடை | சப்பணி |
| சக்கல் | சடைவு | சம்பல் |
| சக்கு | சண்டி | சப்பு |
| சக்கை | சண்டு | சப்பை |
| சகடம் | சண்டை | சம்பளம் |
| சகண்டை | சண்ணம் | சம்பா |
| சகதி | சண்ணி | சம்பு |
| சகோடம் | சண்ணு | சம்மணம் |
| சங்கு | சணல் | சமம் |
| சச்சரவு | சதரம் (உடம்பு) | சமர் |
| சட்டம் | சதுப்பு | சமர்த்து |
| சட்டன் | சதை | சமை |
| சட்டி | சந்தனம் | சமையம் |
| சட்டுவம் | சந்தி | சரக்கு |
| சட்டை | சந்தை | சரடு |
| சடக்கன் | சப்பட்டை | சரப்பளி |
| சடங்கு | சப்பளி | சரவடி |
| சடலம் | சப்பரம் | சரவை |
| சடுதி | சப்பன் | சரகர் |

| | | |
|---|---|---|
| சரி | சவ்வு | சவள் |
| சருக்கரை | சவக்கு | சவளம் |
| சருகு | சவத்தல் | சவளி |
| சருச்சரை | சவங்கல் | சவ்வை |
| சருவம் | சவட்டு | சவை |
| சல்லடை | (சவட்டி-சாட்டி) | சழக்கு |
| சல்லரி | சவட்டை | சழி |
| சல்லி | சாட்டை | சள்ளை |
| சலங்கை | சமட்டு | சளை |
| சலம் | சமட்டி (சம்மட்டி) | சளி |
| சலவன் | சவடி | சற்று |
| சலவை | சவடு | சறுகு |
| சலாகை | சவம் | சறுக்கு |
| சலி | சவர் | சன்னம் |
| சலுகை | சவலை | |

மேலும் தனித்தும் இரட்டியும் வரும் பலகுறிப்புச் சொற்களும் சகர முதலவாய் உள.

எடுத்துக்காட்டு:

| | | | |
|---|---|---|---|
| சக்கு | சடார் | சரட்டு | சள்சள் |
| சகசக | சதக்கு | சரேல் | சளசள |
| சட்டு | சம் | சல்சல் | சளப்பு |
| சடக்கு | சர் | சலசல | சளார் |
| சடசட | சரசர | சள் | சறுக்கு |

இனி இற்றைச் செகர முதற் சொற்கள் சில பண்டு சகர முதலவாயிருந்தனவென்றும் அறிதல் வேண்டும்.

எ.டு.: சத்தான் - செத்தான், சக்கு - செக்கு

இவற்றையெல்லாம் நோக்காது குருட்டுத்தனமாய்த் தொல்காப்பியரைக் காத்தற்பொருட்டுத் தொல்பெருந்தமிழின் பெருமையைக் குலைப்பது அறிஞர்க்கு அழகன்று.

சவதலி, சம்பளி, சமாளி என்பன போன்ற திராவிடச் சொற்கள் பிற்காலத்தனவாயிருக்கலாம். ஆயின் மேற்காட்டிய தூய தென் சொற்களெல்லாம் தொன்று தொட்டவையே.

சம்பு என்பது சண்பு என்னும் இலக்கியச் சொல்லின் திரிபாய் இருப்பினும், சம்பங்கோரை, சம்பங்கோழி என்பன தொன்று தொட்ட உலக வழக்கே! என்று எழுதுகின்றார் *(ஒப். மொ. 1, பக். 43-145).*

இதிலிருந்து, பாவாணர் சகரமுதற்சொற்கள் தொல்காப்பியக் காலத்துக்கு முன்பிருந்தே தமிழில் இருந்து வருகின்றன என்றும், சகரமெய் அகரத்தொடு கூடி மொழி முதலில் வருவது தமிழ் மரபே என்றும் கொள்வது தெளிவாகிறது.

## ஆகுபெயர் வகைகள் 22

தொல்காப்பியர் முதலாகுபெயர், சினையாகுபெயர், இடவாகுபெயர், பண்பாகுபெயர், காரணவாகு பெயர், இருபெயரொட்டாகுபெயர், வினைமுதலாகுபெயர், முகத்தல் அளவையாகுபெயர், நிறுத்தலளவையாகுபெயர் ஆகிய 9 ஆகுபெயர் வகைகளைக் கூறினார்.

நன்னூலார் பொருளாகுபெயர், இடவாகுபெயர், காலவாகுபெயர், சினையாகுபெயர், பண்பாகுபெயர், தொழிலாகுபெயர், அளவையாகுபெயர், சொல்லாகுபெயர், தானியாகுபெயர், கருவியாகுபெயர், காரியவாகுபெயர், வினை முதலாகுபெயர் ஆகிய 12 ஆகுபெயர் வகைகளைக் கூறினார். நன்னூல் உரையாசிரியர்கள் உவமையாகுபெயர். இருபெய ரொட்டாகுபெயர் ஆகிய வகைகளைக் கூறினர் (நன். 290).

ஆனால் பாவாணர் பின்வரும் 22 வகையான ஆகுபெயர்களைக் கூறுகின்றார். எடுத்துக்காட்டு:

| | | |
|---|---|---|
| 1. | முதலாகுபெயர் | கவரி (மயிர்) |
| 2. | சினையாகுபெயர் | தலை (மறுதலை), கை (இடக்கை) |
| 3. | இடவாகுபெயர் | குறிஞ்சி (யாழ்) |
| 4. | இடவனாகுபெயர் | கழல், விளக்கு |
| 5. | காலவாகுபெயர் | அஞ்சுமணி, செவ்வந்தி (சாமந்தி) |
| 6. | காலவனாகுபெயர் | கார், கோடை |
| 7. | பண்பாகுபெயர் | வெள்ளை, குட்டை |
| 8. | பண்பியாகுபெயர் | சாம்பல் (வாழை), பனை (அளவு) |

| | |
|---|---|
| 9. அளவையாகுபெயர் | காணம், அரை |
| 10. தொழிலாகுபெயர் | வற்றல், செய்யுள் |
| 11. செய்வோனாகுபெயர் | திருவள்ளுவர், கோலியன் |
| 12. கருவியாகுபெயர் | செம்பு, கண்ணாடி, பொழுது |
| 13. காரணவாகுபெயர் | அம்மை (தவறாயெண்ணியது) |
| 14. காரியவாகுபெயர் | வளை, வெண்கலம் |
| 15. உவமையாகுபெயர் | காளை, பாவை |
| 16. சின்னவாகுபெயர் | கோல், குடை |
| 17. சொல்லாகுபெயர் | உரை (பொருள்) |
| 18. பொருளாகுபெயர் | பள்ளு, இலக்கணம் |
| 19. பெயராகுபெயர் | பேர் (ஆள்) |
| 20. அடையடுத்த ஆகுபெயர் | வெற்றிலை, நால்வாய் |
| 21. பன்மடியாகுபெயர் | மடங்கல், கார் |
| 22. திரிபாகுபெயர் | பைத்தியம் (ஒப்.மொ. II பக். 126) |

## உரிச்சொல் – பாவாணர் தரும் விளக்கம்

செய்யுட்கே உரியதும், செய்யுட்கும் உரைநடைக்கும் பொதுவானதும் எனச் செய்யுட் சொல் இருவகை. அவற்றுள் **செய்யுட்கே உரிய சொல்லே உரிச்சொல்** எனப்படுவது என்பதைக் குறித்தற்கே, வெளிப்படு சொல்லைச் **சொல்** என்றும், வெளிப்படாச் சொல்லை **உரிச்சொல்** என்றும் தொல்காப்பியர் குறித்தது‌உம் என்க.

செல்லல் என்பது போதலைக் குறிப்பின் தொழிற்பெயர், பிறரிடம் போய் இரக்கும் வறுமையாகிய இன்னாமையைக் குறிப்பின் உரிச்சொல். வாள் என்பது கருவியைக் குறிப்பின் பெயர்ச்சொல், அதன் ஒளியைக் குறிப்பின் உரிச்சொல்.

கதழ், துணை போன்ற சொற்கள் உலகவழக்கில் வழங்காமையால் எல்லாப் பொருளிலும் உரிச்சொல் ஆகும்.

இங்ஙனம், சொல்லே உரிச்சொல்லாவதும், ஒவ்வொரு பொருளில் மட்டும் உரிச்சொல்லாவதும் என உரிச்சொல் இருவகை என்கிறார் பாவாணர் *(ஒப். மொ. II, ப. 105).*

1. இசை, குறிப்பு, பண்பு என்பவற்றிற்குரியவையாதலின் உரிச்சொல் எனப்பட்டன என்பார் கருத்தை,

இது நாற் சொல்லுக்கும் பொதுவிலக்கணம் என்றும்,

2. பெயர்க்கும் வினைக்கும் உரியது உரிச்சொல் என்பார் கருத்தை, இது இடைச்சொற்கும் ஏற்கும் என்றும்,

3. பல பொருட்கொரு சொல்லும், ஒருபொருட்குப் பல சொல்லும் என உரியது உரிச்சொல் என்பார் கருத்தை,

இதுவும் நாற்சொற் பொதுவிலக்கணம் என்றும்,

4. வினை வேரே உரிச்சொல் என்பார் கருத்தை,

வினை வேரை வேறாகக் கூறின், இடை வேரையும் வேறாகக் கூற வேண்டும் என்றும்,

5. நெறிப்பட வாராக் குறைச் சொற்கிளவியே உரிச்சொல் என்பார் கருத்தை,

இதற்கு உரையாசிரியர்கள் காட்டியுள்ள விண்ணவிணைத்தது, வெள்ள விளர்த்தது முதலிய காட்டுகளில், நிலைமொழிகள் இடைச்சொல்லாயும் வருமொழிகள் வினைச் சொல்லாயுமிருத்தலின் இவ்வுரை போலியுரை என்றும், **மறுத்து செய்யுளுக்குரிய சொல்லே உரிச்சொல்** என்று பாவாணர் முடிவு செய்வது உரிச்சொற் பற்றிய குழப்பங்களுக்கு மாற்றாகத் தெளிவை ஏற்படுத்துகிறது *(ஒப். மொ. II. ப. 103)*.

## குறிப்புவினைக்கு ஒரு புதிய விளக்கம்

குறிப்புவினை பற்றிய தொல்காப்பிய நூற்பாவுக்கு (வினை. 3) உரையாசிரியர்கள் தொழின்மையும் காலமும் குறிப்பாகத் தோன்றும் வினை என்று விளக்கி, உடையன், கரியன், செய்யன் என்பன போன்ற சொற்களையே காட்டாகத் தந்தனர்.

குறிப்புவினை பற்றிய நன்னூல் நூற்பாவுக்கு (321) ஆறுமுக நாவலர், குழையினன், பொன்னினன், அகத்தினன், புறத்தினன்

என்று காட்டுத் தந்து, 'ஒருபொருளை வழங்குதற்கு வரும் பெயராய் நில்லாது, குழையையுடையனாயினான் ஆகின்றான், ஆவான் என்று வருதலால் வினைக்குறிப்புச் சொல் என்று விளக்கினார். ஆனால் பாவாணரோ, தொழின்மையைச் சிறிதும் உணர்த்தாது, ஒரு பொருளை வழங்குதற்கு வரும் மரம் முதலிய பெயர்களையே வினைக் குறிப்பாகக் கொள்ளுகின்றார். அவர் கூறுவதாவது:

குறிப்பு வினைமுற்று மூவகையது,

1. பாலீறில்லாத பெயர், கா: அது மரம்; அவன் யார்?
2. பாலீறுள்ள பெயர். கா: கண்ணன், நல்லது, நல்ல.
3. குறைவினை (Defective verb) கா: உண்டு, இல்லை

*(ஒப். மொ. II. ப. 145).*

இவ்விளக்கித்திலிருந்து பெயர்ச்சொற்களே சூழ்நிலையால் குறிப்புவினையாகப் பொருள்தருகின்றன என்பது தெளிவாகிறது *(ஒப். மொ. II. ப. 145).*

## குறைவினை (Defective verb)

பெயரெச்ச வினையெச்சங்களைக் குறைவினைகள் என்று இலக்கணிகள் குறிப்பிடுவதுண்டு. ஆனால் பாவாணர் வேறு, இல்லை, உண்டு, வேண்டும், தகும், படும், கூடும், போதும் என்பன போன்ற வினைகளைக் குறைவினைகள் என்கிறார். இவற்றை ஐம்பால் மூவிடங்கட்கும் பொதுவினை என்பது மரபு. குறைவினையைப் பாவாணர் விளக்கும் முறை புதுமையானது. அது வருமாறு:

1. எல்லாத் திணை பாலிடங்கட்கும் புடைபெயராத வினை குறைவினையாகும். கா: வேண்டும், கூடும், போதும்.

வேண்டு = விரும்பு. எனக்கு அது வேண்டும் = யான் அதை விரும்புவேன். விருப்பம் இங்குத் தேவையைக் குறிக்கும். நீ அதைச்

செய்ய வேண்டும் = நீ அதைச் செய்ய யான் விரும்புவேன். உனக்கு என்ன வேண்டும்? = நீ என்ன விரும்புவாய்?

செய்யும் என்னும் வாய்பாட்டு எதிர்கால வினைமுற்றாகிய 'வேண்டும்' என்பது இன்று பொருள் மறைந்து வழங்குகிறது. இது தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தொடங்கினதாகும்." (ஒப். மொ. II. ப. 149).

## வழுவமைதி வினை (Anamolous verb)

தமிழில் அன்மைகுறிக்கும் வினை, ஐம்பால் மூவிடங்களிலும் பின் வருமாறு நிகழும்:

| | |
|---|---|
| நான் அல்லேன் | அவன் அல்லன் |
| நாம் அல்லேம் | அவள் அல்லள் |
| நீ அல்லை | அவர் அல்லர் |
| நீர் அல்லீர் | அது அன்று |
| | அவை அல்ல |

ஆனால் இன்றைய தமிழில் அவ்வினை எல்லாத்திணை பால் இடங்களிலும்,

| | |
|---|---|
| நான் அல்ல | அவன் அல்ல |
| நாம் அல்ல | அவள் அல்ல |
| நீ அல்ல | அவர் அல்ல |
| நீர் அல்ல | அது அல்ல |
| | அவை அல்ல |

என்று வழுப்பட வழங்குகிறது. அல்ல என்ற வடிவம் அவை என்ற எழுவாயுடன் மட்டுமே இயையக் கூடியது. எனினும் இவ்வழு வழக்கு உயர்ந்தோரின் எழுத்து வழக்கிலும் இடம்பெற்று விட்டதால் பாவாணர் இதனை ஏற்றுக்கொண்டு இலக்கணத்தில் இடந்தருகிறார். அவர் தரும் காட்டு:

நான் அல்லேன் - வழாநிலை; நான் அல்ல - வழுவமைதி
(ஒப். மொ. II. ப. 149)

## 'போட்டான்' என்பதன் பகுதி யாது?

இடு என்னும் பகுதி ஒன்று இரட்டி, இட்டான் என்றாகி இறந்த காலம் காட்டும். இதில் உள்ள 'ட்' இடைநிலையன்று. கு, டு, று என்று முடியும் சில குறிலிணைப் பகுதிகள் தன்னொற்று இரட்டித்து இறந்த காலம் காட்டும் என்று இதற்கு ஒரு விதி உண்டு. அது போல் தானே 'போட்டான்' வந்தது? அதில் உள்ள பகுதி 'போடு' என்பது தானே? அதுதானே ஒற்று இரட்டி இறந்த காலம் காட்டுகிறது? அப்படியானால் மேற்கண்ட விதி எப்படி இதற்குப் பொருந்தும்? போடு என்பது குறிலிணைப் பகுதி அன்றே. என்ற ஐயம் எவர்க்கும் எழும். இதனைப் பாவாணர் தெளிவாக்குகிறார்.

போ - போடு - போகடு → போடு என்றாகும். இது மரூஉ வடிவம். போட்டான் என்பதில் உள்ள டகரம், அடு என்ற குறிலிணைப் பகுதியில் உள்ள டகரமே. எழுந்திடு → எழுந்திட்டான் ஆனது போல, போகடு → போகட்டான் ஆனது. அதுவே போட்டான் என்று மருவியது என்று அவர் விளக்கும் போது தெளிவு பிறக்கிறது *(கட்.வ.57).*

## 'குயவன்' வரலாறு

குடமும் சட்டியும் பானையும் பண்ணும் தொழிலாளிக்குக் குயவன் என்ற பெயர் வந்த வரலாற்றைப் பாவாணர் பின்வருமாறு கூறுகின்றார். ட-ச போலியாகும். அதன் படிக் குடம் செய்வன் என்ற பொருளில் உருவான குடவன் என்ற பெயர் 'குசவன்' ஆனது. ச-ய போலியாகு:ம. அதன்படிக் 'குசவன்' - 'குயவன்' ஆனது *(கட்.வ.51).*

## எத்தனை, எவ்வளவு, எத்துணை

எத்தனை - எண் குறிப்பது; எவ்வளவு - அளவு குறிப்பது; எத்துணை இரண்டும் குறிப்பது *(கட்.வ. 59).*

## தீஞ்சுவை, தீச்சுவை

தீஞ்சுவை = தீம் + சுவை (தீம் இனிய) இனிய சுவை;
தீச்சுவை = தீமை + சுவை - தீய சுவை *(கட்.வ. 60).*

## Visa என்பதற்குத் தமிழ் – புகவுச்சீட்டா? நுழைவுச் சீட்டா?

*நுழைதல்* - இடுக்கமான வழியில் போதல்; புகுதல் - அகன்ற வழியில் போதல். எனவே புகவுச் சீட்டை நுழைவுச்சீட்டு என்பது வழு *(கட்.வ. 62).*

## பழக்கம், வழக்கம்

பழக்கம் (Practice) தற்காலிகமானது, வழக்கம் (Habit, Custom) எப்போதும் இருப்பது *(கட்.வ. 62).*

## மொழிபெயர்ப்பும் மொழியாக்கமும்

ஆங்கிலத்தில் உள்ளதைத் தமிழில் பெயர்க்கும்போது ஆங்கிலத்திலுள்ள ஒவ்வொரு சொல்லையும் மொழி பெயர்த்தமைப்பது சிலர் கடைப்பிடிக்கும் நெறி. அவர்கள் 'He who steals' என்பதைத் 'திருடுகிறான் எவனோ அவன்' என்று மொழிபெயர்ப்பார்கள். ஆனால் பாவாணர் 'திருடுகிறவன்' என்று வினையாலணையும் பெயராக, ஒரே சொல்லாகத் தமிழ் மரபுக் கேற்ப மொழியாக்கம் செய்கிறார்.

## உயர்திணைப் பெயர்போல் தோன்றும் அஃறிணைப் பெயர்கள்

அலவன், இடவன், வலவன், கடுவன், கத்திரிப்பான், சுணங்கன், சுடுகாடு மீட்டான் முதலிய பெயர்கள் உயர்திணை வடிவில் இருப்பினும் அஃறிணை முடிபே கொள்ளும் என்று கூறி,

அலவன் - ஆண் நண்டு, இடவன் - இடப்புறக் காளை, வலவன்-வலப்புறக்காளை, கடுவன்- ஆண் குரங்கு, கத்திரிப்பான்-கத்திரிக்கோல், சுணங்கன்-ஆண் நாய் சுடுகாடு மீட்டான்-முடக்கொற்றான் கொடி என்ற விளக்கத்தையும் தருகிறார்.

எ.டு: இடவன் நன்றாய்ப் போகிறது. *(உ.த.இ., I, 102)*

## இ. பொதுவியல்

### நிறுத்தக் குறிகள் (Punctuation)

ஐரோப்பியர் வருகைக்கு முன் தமிழில் எல்லாவற்றையும் உரைநடையில் எழுதும் வழக்கமில்லை. கட்டடக்கலை, மருத்துவம், கணியம், அறிவியல் தொழில்நுட்பங்கள் பற்றிய செய்திகளும் செய்யுள் வடிவிலேயே எழுதப்பட்டன. செய்யுள்களில் நிறுத்தக்குறிகள் இடும் வழக்கம் இல்லை. கால்புள்ளி இடவேண்டிய இடங்களில் உம் என்பது போன்ற இடைச் சொற்கள் இடப்பட்டன. முக்காற்புள்ளி இடவேண்டிய இடங்களில் அவையாவன, வருமாறு, என்பன போன்ற சொற்கள் எழுதப்பட்டன. ஆ, ஓ என்ற வினாவிடைச் சொற்கள் வினாக் குறியின் வேலைகளைச் செய்தன. என்னே, அந்தோ, ஐயோ முதலிய வியப்பிடைச் சொற்கள் வியப்புக் குறியின் தேவையை நிறைவேற்றின. என்க, என்பது என்ற சொற்கள் முற்றுப் புள்ளிகளின் இடத்தில் நின்றன. என, என்னும், என்ற ஆகிய சொற்கள் மேற்கோள் குறிகளின் பணியைப் பார்த்தன. அதாவது என்ற சொல் அடைப்புக்குறி இடவேண்டிய இடங்களில் நின்றது. சமக்குறியின் தேவையை நிகர் என்ற சொல் நிரப்பியது. ஆகும், ஆனது என்ற சொற்கள் அம்புக்குறியின் வேலையைச் செய்தன.

தமிழில் உரைநடையை மிகுதியாகப் பயன்படுத்தக் காரணமான ஐரோப்பியர், அவர்கள் பயன்படுத்திய பல வகையான நிறுத்தக் குறிகளைத் தமிழிற் புகுத்தினர். அவை தமிழ் நடையில் மேலும் தெளிவைக் கூட்டின. "நிலமும் நீரும் தீயும் வளியும் வானும் என்பதை நிலம், நீர், தீ, வளி, வான் எழுதும் முறை வந்தது. முருகனோ கந்தனோ' என்பதில் ஓகாரம் வினாவை உணர்த்தினாலும் 'முருகனோ? கந்தனோ? என்று அதன்மேல்

வினாக்குறியும் இடும் வழக்கம் வந்தது. நிறுத்தக்குறிகள் பெரும்பாலான புணர்ச்சி விதிகளையும் வேலையிழக்கச் செய்தன. கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்' என்பதை புணர்ச்சி விதிகளைப் பற்றிக் கவலைப்படாமல் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலனும் என்று காற்புள்ளி யிட்டு எளிதாகப் படித்துணருமாறு செய்வதற்கு நிறுத்தக் குறிகள் பயன்பட்டன. ஆனால் தமிழர்க்குப் புதியனவான இக்குறிகளை எங்கெங்கே இடுவது என்பதைக் கற்பிக்க வேண்டியிருந்தது. அந்தப் பணியைப் பாவாணர் மிகவும் பொறுப்புடன் செய்திருக்கிறார். தமதுகட்டுரை வரைவியல் என்ற நூலிலும், உயர்தரக் கட்டுரை இலக்கணம் முதற்பாகத்திலும் பல்வேறு நிறுத்தக் குறிகளைப் பற்றிய செய்திகளை மிகவும் விரிவாகவும் வேண்டிய எடுத்துக்காட்டுகளுடனும் விளக்குகிறார். அவர் கூறுவன வருமாறு:

நிறுத்தக் குறிகள் வாக்கியப் பிரிவுபாட்டிற்கும் பொருள் தெளிவிற்கும் இன்றியமையாதனவாதலின் அவையின்றி ஒரு வாக்கியமும் எழுதுதல் கூடாது.

## 1. காற்புள்ளி (Comma) வருமிடங்கள்

பொருள்களைத் தனித்தனிக் குறிப்பிடல், அடுத்தடுத்து வரும் ஒரே எழுவாய்ப் பயனிலைகள், எச்சச் சொற்றொடர், பட்டப் பெயர் இடையீடு, முகவரிச் சொற்கள், எண்தானம், எடுத்துக் காட்டுகள், இணைப்புச் சொல், திருமுக விளி, இணை மொழிகள், நெடுந்தொடரெழுவாய், பொருள் மயங்குமிடம், பொருள் விளக்க இடைப்பிறவைப்பு, ஒரு பொருளைச் சிறப்பாய் வரையறுத்தல், வாக்கியவுறுப்பாய் வரும் மேற்கோள், பகுதி குறிக்கப்படும் நுற்பெயர், நூற்பகுதி குறித்தல், தேதி, சொற்பொருள் கூறல்.

எ.டு.: பொருள்களைத் தனித்தனியாகக் குறிப்பிடல்: சென்னை, காஞ்சிபுரம், தஞ்சை, சேலம் முதலிய இடங்கள்.

## 2. அரைப்புள்ளி (Semicolon) வருமிடங்கள்

புணர் வாக்கியம், வேறுபட்ட பொருள் கூறல், கருத்தொத்த பலவிடங் கூறல்.

எ.டு.: புணர்வாக்கியம் : இயந்திரம் உழவுத் தொழில் செய்கிறது; மாவரைக்கின்றது; அச்சடிக்கின்றது.

## 3. முக்காற்புள்ளி வருமிடங்கள்

சிறுதலைப்பு, நூற்பகுதியெண், தன் முகவரியில் நகர்ப் பெயர், ஒப்பு நோக்காய் வரும் பெருங்கூட்டு வாக்கியம்.

எ.டு.: சிறு தலைப்பு: சார்பெழுத்து.

## 4. முற்றுப்புள்ளி (Full stop) வருமிடங்கள்

தலைப்பின் இறுதி, வாக்கிய இறுதி, வாக்கிய வுறுப்பாய் வாராத மேற்கோள் இறுதி, முகவரியிறுதி, தேதியிறுதி, சொற்குறுக்கம், மணிப்பிரிவு, கையெழுத்து.

எ.டு.: வாக்கிய இறுதி: உருவத்தில் மாந்தராய் இருப்போர் எல்லாம் உண்மையில் மாந்தர் அல்லர்.

## 5. வினாக்குறி (Note of Interrogation)

ஒருவினா வாக்கியம் முற்று வாக்கியமாயும் நேர்கூற்று வாக்கியமாயுமிருப்பின், இறுதியில் வினாக்குறி பெறும். நேரல் கூற்று வாக்கியமாயும் புணர்ச்சிபெற்ற நேர் கூற்று வாக்கிய மரபு மிருப்பின் வினாக்குறிபெறாது எ-டு. அது என்ன?

எ.டு.: "நீ வருகிறாயா?" என்று கேட்டான்.

## 6. வியப்புக்குறி (Note of Exclamation)

வியப்புக்குறி, வியப்படைச் சொல்லுக்குப் பின்பும், நேர்கூற்று வியப்பு வாக்கிய இறுதியிலும் வரும்.

எ.டு.: ஆகா! "என்னே இதன் பெருமை!" என்றான்.

## 7. விளிக்குறி (Vocative sign)

எ.டு. அவைத்தலைவீர்! அவையீர்! உடன் பிறப்பாளரே! உடன் பிறப்பாட்டியரே!

## 8. மேற்கோட் குறி (Quotation Marks)

மேற்கோட்குறி ஒற்றைக் குறி இரட்டைக் குறி என இருவகைப்படும்.

இரட்டைக்குறி வருமிடங்கள் : நேர்கூற்று, மேற்கோள், ஒற்றைக் குறிவருமிடங்கள் : தற்சுட்டு, வாய்பாடு, புதுக்குறியீடு, பிறர் கூற்றுப் பகுதி, பிறர் குறி மேற்கோள், கட்டுரைப் பெயரும் நூற் பெயரும், மேற்கோட்குள் மேற்கோள், பழமொழி.

எ–டு. நேர்கூற்று: 'நான் வருகிறேன்' என்றான்.

குறிப்பு: பொதுவாக, மேற்கோட்குறி பெற்ற பகுதியின் இறுதியில் புணர்ச்சியிருத்தல் கூடாது. புணர்ச்சி இன்றியமையாத விடத்தில் மேற்கோட்குறியை மேற்கோளிறுதியொட்டிக் குறிக்க வேண்டும்.

எடு. 'தமிழ்ப் பொழிலு' க்குக் கட்டுரை வழங்குபவர்க்கு, பக்கத்திற்கு அரையுருபா வீதம் நன்கொடையளிக்கப்படும்.

## 9. பிறைக்கோடு (Brackets)

பிறைக்கோடு ஒற்றைப் பிறைக்கோடு, இரட்டைப் பிறைக்கோடு, பகர அடைப்பு என மூவகைப்படும்.

ஒற்றைப் பிறைக்கோடு வருமிடங்கள் : மொழிபெயர்ப்பு, பொருள் கூறல், பொருள் விளக்கம், சிறுபிரிவெண், பாட வேறுபாடு, உரையிற் சொல்வருவித்தல்.

இரட்டைப் பிறைக்கோடு வருமிடங்கள்: பலவரிப் பொதுமை, விடுப்போன் முகவரி, விண்ணப்பக் கால விடக் குறிப்பு.

பகரவடைப்பு வருமிடங்கள்: வரிக்கு மிஞ்சிய பகுதி, பிறைக் கோட்டை உட்கோடல்.

எ.டு.: அறத்தடுமாற்றம் (தருமசங்கடம்) என்பது, இரு வினைகளுள் எது செய்வதென்று தெரியாமல் இடர்ப்படல்

ஒன்றைப் பிறைகோடு : ( )

இரட்டைப் பிறைக்கோடு : { }

பகர அடைப்பு : [ ]

## 10. இடைப்பிறவைப்புக்குறி (Parantheses)

ஒரு வாக்கியத்தினிடையில், அதனோடு இலக்கணத் தொடர்பில்லலாத ஒரு சொற்றொடரை வைப்பது, இடைப்பிறவைப்பாகும்.

எ.டு. ஐயா! உங்களைக் கண்டபோது - உண்மையைச் சொல்லுகிறேன் - எனக்கு அடையாளமே தெரியவில்லை.

## 11. கீற்று (Dash) வருமிடங்கள்

மொழிபெயர்ப்பு, பணத்தொகைக் குறிப்பு, தேதிக் குறிப்பு, சொற்றிரிபு குறித்தல், பொருள் கூறல், இலக்கணங்கூறல், தேர்வில் விடைகேட்டல், தன் கருத்துரைத்தல், சடுதியான கருத்து மாற்றம், வெவ்வேறு பொருள்களைத் தொகுத்துக் கூறல், இடையளவு, இடையொழிபு, மணிக்குறிப்பு, கூட்டுச் சொல். எடு. எழுத்தியல்- Orthography.

## 12. வரலாற்றுக் குறி வருமிடங்கள்

வரலாறுரைத்தல், பொருள்களை வகுத்துக் கூறல், செய்தியறிவிப்பு தேர்வு வினா.

எ.டு.: மிக்கோன் உலகளந்த வரலாறு:-

## 13. தொகுநிலைக்குறி (Apostrophe)

எ.டு.: 8-10-35

## 14. மேற்படிக்குறி

எ.டு.: பாடம் படித்தான் - 2-ஆம் வேற்றுமைத் தொகை
பாடத்தைப் படித்தான் - " " விரி

## 15. விடுபாட்டுக் குறி

ஒரு மேற்கோளில், வேண்டாத பகுதி விடப்படும். அது புள்ளி வரிசையாலாவது, உடுக்குறி (Asterisk) வரிசையாலாவது குறிக்கப்பெறும்.

.................................................................

உடைப்பெருஞ் செல்வ ராயினும்......................

........................................ மக்களை இல்லோர் *(புறம். 188)*

## பிற குறிகள்

| | |
|---|---|
| 1. சரிசமக் குறி | = |
| 2. புணர்ச்சிக் குறி | + |
| 3. முரண்பாட்டுக்குறி | x |
| 4. சொன்மூலக்குறி | > < |
| 5. செருகற்குறி | தமிழ்‸க்கழகம் |
| 6. அம்புக்குறி | → |

குறிப்பு: திரிதற்புணர்ச்சியின் பின் காற்புள்ளியிட்டெழுதும் சில யாழ்ப்பாணப் புலவர் வழக்கம் பின்பற்றத் தக்கதன்று.

எ.டு.: கவலை தருவதனாற் செல்வம் துன்பமென்றறியப்படும்.

## பாவாணர் தரும் எடுத்துக்காட்டுகளின் சிறப்பு

எடுத்துக்காட்டு இல்லாத இலக்கணச் செய்தியால் எந்தப் பயனும் இல்லை. இலக்கண விதியைத் தெளிவாகப் புரியச் செய்வன பொருத்தமான, தெளிவான எடுத்துக்காட்டுகளே. அவ்வெடுத்துக்காட்டு இலக்கணத்தொடு பொருந்துவதாக இருப்பது போதுமானது. எனினும், பாவாணர் தரும் எடுத்துக்காட்டுகள் அறிவை வளர்த்து வளப்படுத்தும் சிறந்த கருத்துகளாகவும், உணர்வைப் பண்படுத்தும் சுவையான கூற்றுகளாகவும் இருக்கும் என்பது வேறு எங்கும் காண முடியாத சிறப்பு. அத்தகைய எடுத்துக்காட்டுகளுக்காகவே அவர் பல நூல்களை முயன்று புரட்டியிருக்கிறார். அவரது ஆழ்ந்தகன்ற பல்துறையறிவும் அவர் தரும் எடுத்துக்காட்டுகளால் அறியப்படும்.

பாவாணர் தரும் எடுத்துக்காட்டுகள் அறிவின் கருவூலம். ஒருவர் அவற்றைப் படித்தே சிறந்த அறிவாளியாக முடியும். சான்றுக்கு இங்கே சிலவற்றைக் காண்போம்.

## அறிவுக்கு விருந்தாவன

1. பழந்தமிழ் நாட்டின் பெரும்பகுதியாகிய குமரிநாடு கடலுள் மூழ்கிக் கிடக்கிறது.
2. திராவிட மொழிகள் மொத்தம் பதின்மூன்று.
3. வீரசோழியம் வடமொழி வழக்கைத் தழுவிய தமிழிலக்கணம்.
4. அருந்தமிழ் நூல்களை முதன்முதல் அழகாக அச்சிட்டுத் தந்தவர் ஆறுமுகநாவலர்.
5. அருணகிரியார் வண்ணம் பாடியதைப் போல வண்ணம் பாடுகின்றவர் முன்னுமில்லை; பின்னுமில்லை.
6. நாளும் வேளையும் பார்த்துச் செய்யும் கீழ்நாட்டாரின் சராசரி வாழ்நாள் 25 ஆண்டு; அவற்றைப் பாராது செய்யும் மேல்நாட்டாரின் சராசரி வாழ்நாள் 60 ஆண்டு!
7. "வடமொழி தேவ மொழி என்று நீ குருட்டுத்தனமாய் நம்பினால் அதற்கு நான் என்ன செய்வது?"
8. தமிழ் நாகரிகம் எகிப்திய நாகரிகத்துக்கு முந்தியதென்று நான் உண்மையைச் சொல்லும்போது, **தமிழரும்** எள்ளி நகையாடுகின்றனர்!
9. "மீன்கள் இடுகின்ற முட்டையெல்லாம் பொரிந்து சிறுமீன்களாகி வளருமாயின், நீண்டகன்ற பெருங்கடலும் அவற்றுக்கிடமளிக்கப் போதியதாகாது. இவற்றைத் தோற்றுவித்த பெரிய மீன்களே அதிவிரைவில் இவற்றைப் பிடித்துத் தின்றுவிடுகின்றன" - பா.வே. மாணிக்க நாயகர்.
10. தமிழ் இந்திய மொழிகளுள் மிக முந்தியது.
11. வில்லிபுத்தூரார் பாடிய பாரதத்தை நல்லாப்பிள்ளையார் நிறைவித்தார்.

12. வடநூலார் கூறும் நால்வருணமும் தென்னூலார் கூறும் நாற்குலமும் வேறுபட்டவை.

13. கடல்கோளால் அழிந்த தமிழ் நூல்களினும், பதினெட்டாம் பெருக்கில் அழிந்த தமிழ் நூல்கள் கழிபல.

14. உலகிலேயே தாய்மொழியைப் பேணாத நாடு தமிழ்நாடு ஒன்றுதான்.

15. ஏர்க்காட்டில் ஒரு செடியிருக்கிறது; அது பன்னிரண்டு ஆண்டிற்கொருமுறை தான் பூக்கும்.

16. கொல்லிமலையில் ஒரு செடி உள்ளது. அது ஆள்காட்டி எனப்படும். அது ஆள்வரவைக் காட்டும்.

17. நோபெல் பரிசு ஆண்டு தோறும் இலக்கியம்,. பூதநூல், வேதிநூல், மருத்துவம், சமாதானம் ஆகிய ஐந்து துறையில் அருந்தொண்டாற்றியவருக்கு அளிக்கப்படும்.

18. இளவட்டக் கல்லைத் தென்னாட்டுச் சிற்றூர்களில் காணலாம்.

19. இராமலிங்க அடிகளார் எப்படி மறைந்தார் என்பதைப் பற்றி இருவேறு கருத்துகள் வழங்கி வருகின்றன.

20. கோயம்புத்தூர் `திருவாளர் துரைசாமி நாயுடு சரியானபடி ஊக்குவிக்கப் பெற்றிருந்தால், இன்று அவரது இயந்திரப் புலமை நுணுக்கத்தை உலகம் கொண்டாடியிருக்கும்.

## உணர்வுக்கு விருந்தாவன

1. "தமிழன் நாய் போன்றவன்; ஏனெனில் தன்னினத்தை வெறுக்கிறான்; வேற்றினத்தை விரும்புகிறான்" என்று பா.வே. மாணிக்க நாயகர் சொல்வது வழக்கம்.

2. "ஒரு செல்வனிடத்தில் சென்று பாடினால் அவன் காசு கொடுக்காவிட்டாலும் போகின்றான்; காது கொடுக்க மாட்டேன் என்கின்றானே!" என்று சர்க்கரைப் புலவர் அடிக்கடி கூறுவார்.

3. திருடனும் கடவுளை வழிபடுவதால், கடவுள் வழிபாட்டால் மட்டும் ஒருவனைப் பத்தனென்று துணிய முடியாது.

4. இக்காலத்தில் தமிழுக்கே உழைப்பவர்க்கும், தமிழை வளர்ப்பவர்க்கும் தூற்றலும் வேலைக்கேடும் தவிர வேறொன்றுமில்லை. ஆனால் தமிழைக் கெடுப்பவர்க்கோ போற்றலும், பட்டம் பதவிகளும், பரிசளிப்பும், பண முடிப்பும் நிரம்பவுண்டு.

5. சென்ற வாரம் ஒரு போலித் துறவி என்னிடம் வந்து "நான் கயிலையிலிருந்து வருகின்றேன். குமரியாடித் திரும்ப வேண்டும். அதற்கு 50 உருபாய் செல்லும். அதைக் கொடுத்தால் திரும்புகாலில் உனக்குப் பொன்னாக்க இரசவாதம் சொல்லித் தருகிறேன்" என்று சொன்னான். நான் "பொன்னாக்கமும் வேண்டாம்; மண்ணாக்கமும் வேண்டாம்; இனிமேல் நீ இந்தப் பக்கம் வரவும் வேண்டாம்" என்று சொல்லித் துரத்திவிட்டேன்.

6. அயன்மொழி வளர்ச்சிக்கு அளவிறந்து நீளும் சில வள்ளல்களின் கைகள், தமிழுக்கு முடம்படுகின்றன.

7. இந்தி கட்டாயப் பாடமாக வைக்கப்பட்டதை அறிந்தவுடன் இளைசைக்கிழார் சோமசுந்தரபாரதியார்க்குக் கண் சிவந்தது; மீசை துடித்தது; மயிர் சிலிர்த்தது; தம் உதட்டைக் கடித்து வஞ்சினங் கூறி உரறினார்.

8. காடுகெட ஆடுவிடு; ஆறுகெட நாணலிடு, ஊரு கெட நூலை விடு.

9. "தென்னை மரத்தில் ஏனடா ஏறினாய்?" என்றால், "புல் பிடுங்க ஏறினேன்; புல் இல்லை" என்றான்!

10. அப்பன் 'காடு வெட்டிப் பருத்தி விதைக்கிறேன்" என்றான். "அப்பா எனக்கொரு துப்பட்டி" என்கிறான் பிள்ளை! அதற்கு, "சீ, கைகால் பட்டுக் கிழியப் போகிறது; மடித்துப் பெட்டியிலே வை" என்கிறான் அப்பன்!

## 3. அயற்சொல் – தமிழ் அகரவரிசை

பாவாணர் தம் நூல்கள் பலவற்றிலும், தமிழிற் கலந்திருக்கும் பல திறப்பட்ட அயற்சொற்களை எடுத்துக்காட்டி அவற்றிற்கான தமிழ்ச் சொற்களைத் தந்துள்ளார். அவற்றில், பரவலாகப் பழக்கத்துக்கு வந்துவிட்ட (அர்த்தம் - பொருள், அஸ்திவாரம் - அடிப்படை, ஆகாரம் - உணவு, ஆனந்தம் - மகிழ்ச்சி, நமஸ்காரம் - வணக்கம் என்பன போன்ற பலருமறிந்த சொற்களையும், (பிரதோஷம் - மசண்டை, நாகசதுர்த்திஸ்நானம் - நாக நலமிக் குளிப்பு என்பன போன்ற பெரும்பாலும் இன்று தேவைப்படாத சொற்களையும் விட்டு, இன்று நல்ல தமிழ் எழுத விரும்புவோர் யாவரும் அறிந்து கொள்ள வேண்டியன என்று யான் கருதிய சொற்களை மட்டும் அகரவரிசையில் பின்னிணைப்பாகத் தந்துள்ளேன். அச்சொற்கள் சமற்கிருதம், இந்துத்தானி ஆங்கிலம் எனப் பல திறப்படும்.

## வடசொல் (சமற்கிருதம், இந்துத்தானி) - தமிழ்

**அ**க்னி நட்சத்திரம் - எரிநாள்
அகங்காரம் - நானுணர்வு
அகஸ்மாத்தாய் - தற்செயலாய்
அங்கம் - உறுப்பு
அங்கவஸ்திரம் - மேலாடை
அசங்கியம் - அருவருப்பு
அசல் - முதல்
அசாத்தியம் - கூடாமை
அட்டமாசித்தி - எண்பெரும்பேறு
அண்டம் - கோளம்
அணிமா - நுண்மை
அத்யக்ஷர் - கண்காணியர்
அத்யாவசியம் - இன்றியமையாமை
அதிசயம் - வியப்பு
அதிர்ஷ்டம் - ஆகூழ், போங்கு
அந்தம் - முடிவு
அந்தரங்கம் - மறைமுகம்
அந்தஸ்து - நிலைமை
அநுவாதம் - வழிமொழிவு
அநேக - பல
அப்பியாசம் - பயிற்சி
அப்புதேயுவாயு பிருதிவி ஆகாயம் - நீர் தீ வளி நிலம் வான்
அப்யங்கனஸ்நானம் - தலைமுழுக்கு
அபராதம் - தண்டம்
அபாயம் - ஏதம்
அபிராமி - அழகம்மை
அபிவிர்த்தி - மிகுவளர்ச்சி
அபிஷேகம் - திருமுழுக்கு
அபூர்வம் - அருமை
அமாவாசை - காருவா
அம்பா - அம்மை
அமுல் - ஆட்சி
அயன் - அரசு நிலம்
அர்ச்சகன் - உவச்சன், வழிபாட்டாசான்
அர்த்தநாரீசுவரன் - மங்கை பங்கன்
அர்த்தபுஷ்டி - பொருட்கொழுமை
அராகம் - விழைவு
அரியார்த்தன் - மாலிடங்கொண்டான்
அருணாசலம் - அண்ணாமலை
அரூப - உருவிலா
அலங்காரம் - அணி
அவசரம் - பரபரப்பு
அவசியம் - வேண்டியது
அவயவம் - உறுப்பு
அவலட்சணம் - அழகின்மை
அவிநாசி - புக்கொளியூர்
அவஸ்தை - பாடு, நிலை
அற்புதம் - இறும்பூது
அன்னசத்திரம் - சோற்றுமடம்
அன்னமயகோசம் - உணவியலுறை
அனந்தன் - ஈறிலி
அனாவசியம் - வேண்டாதது, தேவையின்மை
அனாமத் - பெயரிலி
அனுக்கிரகம் - அருள்
அனுபந்தம் - துணைக்கட்டு
அனுபவம் - பட்டறிவு, துய்ப்பு
அனுபோகம் - நுகர்ச்சி
அனுஷ்டி - கைக்கொள்
அஷ்டோத்திர அர்ச்சனை நூற்றெட்டு வழிபாடு
அக்ஷயன் - கேடிலி
அக்ஷரம் - எழுத்து
**ஆ**க்ஞை - புருவிடை
ஆகாமியகர்மம் - எதிர்காலவினை
ஆசனம் - இருக்கை
ஆசிர்வாதம் - வாழ்த்து

ஆட்சேபசமாதானம் - தடைவிடை
ஆணை - சூள், கட்டளை
ஆதி - முதல், முன்னை
ஆதிசக்தி - முந்தையாற்றல்
ஆயுதம் - கருவி
ஆயுள் - வாழ்நாள்
ஆரண்யம் - காடு
ஆராதனை - வழிபாடு
ஆலயப்பிரவேசம் - கோயிற்புகவு
ஆவாரசக்தி - மறைப்பாற்றல்
ஆன்மா - புலம்பன்
ஆன்மதரிசனம் - தற்றெளிவு
ஆனந்தமய கோசம் - மகிழியலுறை
ஆஜர் - வரவு
ஆஸ்தி - செல்வம்
இச்சாசத்தி - விருப்பாற்றல்
இடபாரூடன் - விடையேறி
இந்திரன் - வேந்தன்
இமாசலம் - பனிமலை
இயமம் - அடக்கம்
இரசம் - சுவை, மிளகுநீர்
இராசதம் - மாந்திகம்
இராசி - ஓரை
இருதயம் - நெஞ்சம்
இலங்கோடு - தாழ்சீலை
இலாகா - திணைக்களம்
இலாபம் - ஊதியம்
இலிங்கம் - குறி
இலேசம் - மறைப்பு
இனாம் - கைந்நீட்டம்
இஷ்டம் - விருப்பம்
இஷ்டஜன பந்துமித்திரர் - உற்றார் உறவினர்
இஸ்திரிப்பெட்டி-தேய்ப்புப்பெட்டி
ஈசத்துவம் - இறைமை
ஈசுரம் - பெருவுடையான்மை
ஈசுவரன் - இறைவன்
உண்டியல் - காசோலை
உத்தியோகம் - அலுவல்
உத்தேசம் - மதிப்பு
உதாரணம் - எடுத்துக்காட்டு
உபகாரம் - நன்றி, ஒப்புரவு
உபசாரம் - வேளாண்மை
உபசாரவழக்கு - சார்ச்சிவழக்கு
உபத்திரவம் - வேதனை
உபநயனம் - பூணூல் சடங்கு
உபயக்ஷேமம் - இருபால் நலம்
உபயானுசம்மதமாய் - இருமையால் நேர்ந்து
உபவாசம் - உண்ணாநோன்பு
உபாத்தியாயர் - ஆசிரியர்
உருமால் - குட்டை
உற்சவம் - திருவிழா
உற்சாகம் - ஊக்கம்
உஷ்ணம் - வெப்பம்
உஷார் - விழிப்பு
ஏகாதிபத்யம் - ஒற்றையாட்சி
ஐசுவரியம் - உடைமை
ஐதீகம் - கருதீடு
ஐவேஜ் - உடைமை
ஒரு சந்தி - ஒருவேளை
கங்கணம் - காப்பு, வளையல்
கங்கணவிஸர்ஜனம் - காப்புக் களைதல்
கங்காதரன் - கங்கைதாங்கி
கங்காளன் - குறளன் முதுகொடித் தவன்
கச்சேரி - அரங்கு வழங்கு மன்றம்
கசாய்க்கடை - கறிக்கடை
கபிலை - குரால்
கமகம் - அலுக்கு
கமான் - வளைவு
கர்த்தா - தலைவன்
கர்ப்பக்கிருகம் - அகநாழிகை கருவறை
கர்வம் - செருக்கு

கரிமா - கனமை
கருணை - அருள்
கலாய் - ஈயம்
கலியாணசுந்தரன் - மணவழகன்
கவசம் - அந்தளகம்
கவாத் - சலகு
கவி - பா
கறார் - ஒரு சொல்
கனகசபை - பொன்னம்பலம்
கனிஷ்ட - இளைய
கஜானா - கருவூலம்
கஷ்டம் - வருத்தம்
கஸ்தூரி - காசறை
கஸ்பா - நகர்
கஸரத் - உடற்பயிற்சி
காமாட்சி - காமக்கண்ணி
காமாரி - காமனைக்காய்ந்தான்
கார்த்திகை - ஆரல்
காரணம் - கரணியம்
காலசங்கரமூர்த்தி - காலனை யுதைத்தான்
காலட்சேபம் - காலப்போக்கு
காலி - போக்கிரி
காவியம் - பாவியம், வனப்பு
காவியரசம் - சுவை
கானசபா - இசைக்குழாம்
காஷாயம் - காவி
கிரகம் - கோள்
கிரகி - உட்கொள்
கிரமம் - ஒழுங்கு
கிரயம் - விலை
கிராமசாந்தி - ஊர்ச்சமந்தி
கிராமம் - சிற்றூர்
கிரியாசத்தி - வினையாற்றல்
கிரியை - செய்கை, வழிபாடு.
கிரீடம் - முடிக்கலம்
கிருகப்பிரவேசம் - புதுவீடு புகல்
கிருபை - அருள்
கிருஷ்ணபக்ஷம் - தேய்பிறை, இருட்பக்கம்
கிருஷிகம் - உழவு
கில்லடி - விளையாட்டுக்காரன்
கிஸ்தான் - கோணித்துணி
கிஸ்தி - பகுதி
குஞ்சிதபாதம் - தூக்கிய திருவடி
குதூகலம் - களிப்பு
கும்பாபிஷேகம் - குடமுழுக்கு
குமாஸ்தா - கணக்கன்
குர்சி - நாற்காலி
குஸ்தி - மல்
குஷி - கொண்டாட்டம்
கேதாரகௌரிவிரதம் - மலைமகள் நோன்பு
கேலி - விளையாட்டு
கைதி - சிறையாளி
கோலி - உருண்டை
கோத்திரம் - கொடிவழி, சரவடி
கோரோசனை - ஆமணத்தி
கோவணம் - நீர்ச்சிலை
கோஷ்டி - குழாம்
கோஷா - முக்காட்டுப் பெண்
கௌபீனம் - நீர்ச்சீலை
சக்கரவர்த்தி - மாவேந்தன்
சக்கரவரதன் - சக்கரமீந்தான்
சக்தி - ஆற்றல்
சகதம்பா - உலகம்மை
சகலம் - எல்லாம்
சகலன் - ஓர்புடையான்
சகநாதன் - உலகநம்பி
சகஜம் - இயல்பு
சகஸ்ரநாமம் - ஆயிரம் பேர்
சகுனம் - குறி, புள்

சகோதரன் - உடன் பிறந்தான்
சங்கடம் - இடர்ப்பாடு
சங்கம் - கழகம்
சங்கமேஸ்வரன் - கூடுதுறையான்
சங்கராந்தி - பொங்கல் பண்டிகை
சங்கரி - அழி
சங்கீதம் - இன்னிசை
சங்கோசம் - கூச்சம்
சச்சிதானந்தம் - மெய்யறிவின்பம்
சஞ்சிதகர்மம் - இறந்தகால வினை
சட்டகன் - ஓர்புடையான்
சடாதாரம் - அறுநிலைக் களம்
சத்தம் - ஓசை
சத்திநிபாதம் - அருள்பதிகை
சத்தியம் - உண்மை
சத்துரு - பகைவன்
சத்துவம் - விறல்
சதாசிவம் - என்றும் நல்லான்
சதுரம் - நாற்கோணம்
சதுர் - நடம்
சந்ததி - எச்சம்
சந்தா - கையொப்பம்
சந்தி - தலைக்கூடு
சந்திப்பு - கூடல்
சந்தியாவந்தனம் - அந்தி வழிபாடு
சந்திரசேகரன் - பிறைசூடி
சந்திரன் - நிலா, மதி
சந்தேகம் - ஐயம்
சந்நிதி - திருமுன்
சந்நியாசி - துறவி
சபதம் - வஞ்சினம்
சபாஷ் - நன்று
சம்பந்தம் - தொடர்பு
சம்பாஷணை - உரையாட்டு
சம்புகேசுவரம் - திருவானைக்கா
சம்பூரணம் - முழுநிறைவு
சமத்துவம் - சமன்மை
சமாச்சாரம் -செய்தி
சமாதி - நொசிப்பு
சமுகம் - மன்பதை
சமுச்சயம் - அயிர்ப்பு
சமுசாரம் - குடும்பம்
சமுசாரி - குடும்பி
சமுத்திரம் - வாரி
சர்வமானியம் - முற்றூட்டு
சரணம் - அடைக்கலம்
சரபமூர்த்தி - எண்காற்புள்ளுருவன்
சரஸ்வதிபூஜை - நாமகள் வழிபாடு
சரியை - தொண்டு
சலந்தராரி - கடல் வளர்ந்தானைக் கொன்றான்
சவாரி - ஊர்வு
சவால் - அறைகூவல்
சன்மார்க்கம் - நல்வழி
சனி - காரி
சாக்கிரம் - நனவு
சாட்சி - கரி, கண்டோன்
சாத்விகம் - தேவிகம்
சாத்திரம் - நூல்
சாதனம் - வாயில்
சாதாக்கியம் - நல்லாண்மை
சாதாரணம் - பொது வகை
சாப்பு - இரட்டை (தாளம்)
சாம்பசிவன் - அம்மையப்பன்
சாமீபம் - உடனண்மம்
சாயரட்சை - மாலைப்பூசை
சாயுச்சியம் - உடனொன்றம்
சாரதி - வலவன்
சாரூபம் - உடனருவம்
சாலோகம் - உடனுலகம்
சாஷ்டாங்கநமஸ்காரம் - நெடுஞ் சாண்கிடை வணக்கம்
சாஸ்வதம் - நிலைப்பு
சாஸனம் - பட்டயம்

சிகிச்சை - பண்டுவம்
சிங்காசனம் - அரியணை
சித்தம் - உள்ளம்
சித்தாந்தம் - கொண் முடிபு
சித்திராபௌர்ணமி-மேழவெள்ளுவா
சிதம்பரம் - சிற்றம்பலம்
சிநேகிதம் - நட்பு
சிப்பந்தி - சிற்றலுவலர்
சிப்பாய் - பொருநன்
சிபார்சு - பரிந்துரை
சிரஞ்சீவி - நீடுவாழி
சிரஸ்தார் - தலைமைக்கணக்கன்
சிரேஷ்டம் - மேன்மை
சிவபோகம் - சிவநுகர்வு
சீக்கிரம் - சுருக்காய்
சீதகும்பம் - தண்குடம்
சுக்கிலபட்சம் - வளர்பிறை
சுகம் - உடல்நலம்
சுகாசனன் - நலவிருக்கையன்
சுத்தம் - துப்புரவு
சுத்தவித்தை - வாலறிவம்
சுதந்தரம் - உரிமை
சுந்தரன் - சொக்கன்
சுநீதி - நன்னயம்
சுப்ரமணிய சஷ்டி - முருக அறமி
சுபம் - மங்கலம்
சுபாவம் - இயல்பு
சுயமாய் - தானாய்
சுயராச்சியம் - தன்னரசு
சுரணை - உணர்ச்சி
சுருதி - கேள்வி
சுவர்க்கம் - துறக்கம்
சுவாசம் - உயிர்ப்பு
சுவாதிட்டானம் - அல்கிடம்
சுவாமி - கடவுள்
சுவாமிகள் - அடிகள்
சுவாமி தீர்த்தம் - இறைதூநீர்
சுவேதவனம் - வெண்காடு
சுஷுத்தி - உறக்கம்
சூட்சுமம் - நுண்ணியல்
சூத்திரம் - நூற்பா
சூத்திரன் - தொழும்பன்
சூரசம்கார உற்சவம் - சூர்தடி விழா
சூரியகாந்தி - பொழுது வணங்கி
சூரியன் - கதிரவன்
சேவகன் - இளையன்
சேவை - தொண்டு
சேனாபதி - படைத் தலைவன்
சேஷ்டை - குறும்பு
சைவம் - சிவனியம்
சொக்காய் - சட்டை
சொகுசு - மேனத்து
சொப்பனம் - கனா
சொரூபம் - தன்னியல்பு
சோதா - சோம்பேறி
சோமஸ்கந்தன் - சிவை கந்தர்சேர்ந்தான்
சௌகரியம் - ஏந்து
சௌபாக்யவதி - நிறைசெல்வி
ஞாதுரு - அறிவோன்
ஞாபகம் - நினைப்பு
ஞானசக்தி - அறிவாற்றல்
ஞானம் - அறிவு
டாணா - பாடிகாவல்
டேரா - கூடாரம்
டோலி - ஏணை
தகவல் - செய்தி
தகரார் - தடை
தண்டால் - உழனியாட்டு
தசகாரியம் - பதின்கருமம்
தட்சணை - கொடை
தட்சிணாமூர்த்தி - தென்முகநம்பி

தடத்தம் - சார்பியல்பு
தத்திதாந்தம் - திரிபாகுபெயர்
தந்தம் - மருப்பு
தந்திரம் - நூல், வலக்காரம்
தமாஷ் - வேடிக்கை
தயவு - இரக்கம்
தயார் - அணியம்
தர்க்காஸ்து - புறம்போக்கு
தர்பார் - ஓலக்கம்
தரப்பு - பக்கம்
தரிசனம் - காட்சி
தரித்திரம் - வறுமை
தருமம் - அறம்
தனம் - பணம்
தனுர்பூசை - சிலைப்பூசை
தஸ்தவேஜ் - ஆவணம்
தாக்கல் - பதிகை
தாசி - அடியாள்
தாசில்தார் - வரியாளர்
தாட்சண்யம் - கண்ணோட்டம்
தாம்பூலம் - பாகடை
தாமதம் - தவக்கம், பேயிகம்
தாமிரம் - செம்பு
தாரணை - நிறை
தாலுகா - கூற்றம்
தாவா - வழக்கு
தானியம் - கூலம்
திண்டிவனம் - புளியங்காடு
தியாகம் - ஈகம்
தியானம் - ஊழ்கம்
திரவியம் - பொருள்
திரிபுடை - முப்புடை
திரிபுராரி - முப்புரமெரித்தான்
திரிமூர்த்தி - முத்திருமேனி
திருப்தி - பொந்திகை, சால்வு
திவசம் - இறந்தநாள்
தினம் - நாள்
தினுசு - வகை
தீபாராதனை - விளக்கு வழிபாடு
தீர்த்த அபிஷேகம் - திருப்புனலாட்டு
துக்கம் - துயரம்
துப்பட்டி - இரட்டு
துரதிஷ்டம் - போகூழ்
துரியம் - அயர்வுறக்கம்
துரியாதீதம் - உயிர்ப்படக்கம்
துரோகம் - இரண்டகம்
துரோபவம் - மறைத்தல்
துவஜ அவரோகனம் - கொடி இறக்கம்
துஷ்டன் - தீயவன்
தூரம் - சேய்மை
தேகம் - உடல்
தேவஸ்தானம் - திருக்கோயில்
தைலம் - எண்ணெய்
தோஷம் - குற்றம்
நகல் - படியல்
நகரா - முரசு
நகாஸ் - நுணுக்கம்
நடராஜன் - நடவரசன்
நதி - ஆறு
நவம் - புதுமை
நவராத்திரி - தொள்ளிரவு
நஷ்டம் - இழப்பு
நக்ஷத்திரம் - நாண்மீன்
நாகசதுர்த்தி - நாகநலமி
நாசம் - அழிவு
நாணயம் - காசு
நாதம் - ஓதை
நாமகரணம் - பெயரீடு
நாவம் - ஒலி
நாஷ்டா - சிற்றுண்டி

நிச்சயம் - தேற்றம்
நித்திரை - தூக்கம்
நிந்தி - இகழ்
நிபுணன் - திறவோன்
நிமித்தம் - பொருட்டு
நியதி - யாப்புறவு, ஊழ்
நியமம் - ஒழுங்கு
நியமி - அமர்த்து
நியாயம் - முறைமை
நிர்விகற்ப ஞானம் -
வேறுபாடற்றவுணர்வு
நிரோட்டியம் - இதழகல் பா
நிஜம் - மெய்
நீதி - நயன்
நீலகண்டன் - கறைமிடற்றன்
நைவேத்தியம் - படைப்பு,
காணிக்கை
பக்தவத்சலன் - அடியார்க்கருளி
பக்தன் - அடியான்
பகவான் - பகவன்
பகிரங்கம் - வெளிப்படை
பகுதி - முதனிலை
பங்கா - காற்றுவீசி
பசு - ஆ
பஞ்சகவ்யம் - ஆனைந்து
பஞ்சகோசம் - ஐயுறை
பஞ்சநதீசுவரர் - ஐயாற்றன்
பஞ்சாங்கம் - ஐந்திறம்
பஞ்சாமிர்தம் - ஐயமுதம்
பஞ்சாயத்து - ஊராட்சி
பஞ்சேந்திரியம் - ஐம்புலன்
பட்சிதீர்த்தம் - கழுக்குன்றம்
படுதா - திரை
பத்திரம் - தாள்
பத்திரிகை - தாளிகை
பத்தினி - கற்புடையாள்
பதம் - சொல்
பதார்த்தம் - சொற்பொருள்,
பண்டம், கறிவகை
பதிஞானம் - இறையறிவு
பதிவிரதை - குலமகள்
பந்தம் - கட்டு
பந்து - இனம்
பந்தோபஸ்து - பாதுகாப்பு
பர்தா - முகமூடி
பர்வா - தாழ்வு
பர - பிற
பரஞ்சோதி - பரஞ்சுடர்
பரணிதீபம் - முக்கூட்டு விளக்கு
பரம்பரை - தலைமுறை
பரஸ்பரம் - இருதலை
பராசக்தி - பரையாற்றல்
பரிகாசம் - நகையாடல்
பரிசயம் - பழக்கம்
பரியந்தம் - வரை
பரீட்சை - தேர்வு
பல்டி - கரணம்
பல்லக்கு - சிவிகை
பலான - இன்ன
பவஔஷதீசுவரர் -
பிறவிமருந்திறைவர்
பவுஞ்சு - படை
பவுஷ் - செல்வம்
பஜனை - தேவிசை
பக்ஷி - பறவை
பாக்கி - நிலுவை
பாடலிபுரம் - பாதிரிபுரம்
பாத்திரம் - ஏனம், தகுதி
பாதரசம் - இதள்
பார்வதி - மலைமகள்

பாரா - காவல்
பாவம் - தீவினை, மெய்ப்பாடு
பாஷாணஸ்தாபனம் - கல்நாட்டல்
பிச்சைக்காரன் - இரப்போன்
பிசாசு - பேய்
பிட்சாடனமூர்த்தி-மண்டையேந்தி
பிதுரார்ஜிதம் - முதுசொம்
பிரகதீஸ்வரர் - பெருவுடையார்
பிரகாசம் - ஒளி
பிரகாரம் - படி
பிரச்சாரம் - பரப்புரை
பிரசங்கம் - சொற்பொழிவு
பிரசவம் - பிள்ளைப்பேறு
பிரசாதம் - அருட்கொடை
பிரசித்தம் - வெளிப்படை
பிரசுரம் - வெளியீடு
பிரணவம் - இமிழி
பிரதமம் - முதல்
பிரத்தியட்சம் - கண்கூடு
பிரத்தியாகாரம் - ஒழுக்கம்
பிரதட்சணம் - வலஞ்செய்தல்
பிரதி - படி
பிரதிக்ஞை - சூளுறவு
பிரதிபந்தம் - எதிர்க்கட்டு
பிரபந்தம் - பனுவல்
பிரபல - பெயர்பெற்ற
பிரமாணம் - அளவை
பிரயாசம் - முயற்சி
பிரயாணம் - வழிப்போக்கு
பிரயோகம் - எடுத்தாட்சி
பிரயோசனம் - பயன்
பிரவேசி - புகு
பிரஜை - குடிகள்
பிராகாமியம் - விரும்பியது செய்கை
பிராகாரம் - சுற்றுமதில்
பிராணமயகோசம் -மூசவியலுறை
பிராணன் - உயிர்
பிராது - வழக்கு
பிராணாயாமம் - வளிநிலை
பிராணி - உயிரி
பிராது - வழக்காரம்
பிராப்தி - பேறு
பிராயச்சித்தம் - கழுவாய்
பிராரத்தகன்மம் - நிகழ்காலவினை
பிரியம் - விருப்பம்
பிரேதம் - பிணம்
பிரேரேபி - முன்மொழி
பிக்ஷை - ஐயம்
புண்ணியம் - நல்வினை, அறப்பயன்
புண்ணியக்ஷேத்திரம் - திருக்களம்
புத்தி - மதி
புத்திரன் - மகன்
புதன் - அறிவன்
புராதனம் - பழமை
புருஷர் - ஆடவர்
புருஷன் - கணவன்
புஷ்டி - தடிப்பு
புஷ்பம் - பூ
புஷ்பவதியாதல் - சமைதல்
பூமி - ஞாலம்
பூர்த்தி - நிறைவு
பூர்வஜென்மம் - பழம்பிறவி
பூர்வீகம் - முற்காலம்
பூரணசந்திரன் - முழுமதி
பேட்டி - காண்பு
பேஷ் - நன்று
பைசல் - தீர்ப்பு
பைசா - சல்லி
பைதா - வண்டிக்கால்
பைல்வான் - மல்லன்

பைரவன் - பேமுருவன்
போகிப்பண்டிகை - வேந்தன் திருநாள்
போதி - கற்பி
போர்வீரன் - பொருநன்
போஜனம் - சாப்பாடு
போஷி - ஊட்டு
பௌர்ணமி - வெள்ளுவா
பௌரணை - முழுநிலா
மகஜர் - பொதுமுறையீடு
மகாசிவராத்திரி - சிவனார் பேரிரவு
மகாதேவன் - பெருந்தேவன்
மகாபிஷேகம் - பெருமுழுக்கு
மகாவிஷ்ணு - பெருமாள்
மகிமா - பெருமை
மகேசுவரன் - பெருவுடையான்
மசோதா - வரைமுறி
மணிபூரகம் - நெஞ்சகம்
மத்தி - நடு
மத்தியார்ச்சுனம் - இடைமருதூர்
மத்தியானம் - நண்பகல்
மந்தம் - மழுக்கம்
மயானம் - சுடலை
மராமத்து - பழுதுபார்ப்பு
மரியாதை - மதிப்பு
மலபரிபாகம் - மாசுதேய்நிலை
மலஜலம் கழித்தல் - ஒன்றுக்கு இரண்டுக்குப் போதல்
மனு - வேண்டுகோள்
மனோமயகோசம் - மனவியலுறை
மஜுதி - பள்ளிவாசல்
மஹால் - அரண்மனை
மாசூல் - விளையுள்
மாதிரி - போலிகை
மாத்ருபூதம் - தாயுமானவன்
மாத்ருபூமி - தாய்நாடு
மாமிசம் - இறைச்சி
மாமூல் - வழக்கம்
மார்க்கம் - வழி
மாயூரம் - மயிலாடுதுறை
மாலுமி - மீகாமன்
மாஜி - மேனாள்
மிட்டாதார் - வேள்
மிட்டாய் - தித்திப்பு
மிதுனம் - ஆடவை
மிராஸ்தார் - பண்ணையார்
மிருகம் - விலங்கு
மிருதங்கம் - மதங்கம்
மீனாட்சி - கயற்கண்ணி
முகஸ்துதி - முகமன்
முகாம் - பாசறை
முகூர்த்தம் - முழுத்தம்
முச்சரிக்கை - இணங்கெழுத்து
முசாபரி - வழிப்போக்கர்
முரபா - ஊறல்
முலாம் - பொற்பூச்சு
முன்சீப் - ஊராளி
முன்ஷி - பண்டிதர்
முஸ்தீப் - அணியம்
மூர்க்கன் - முரடன்
மூலாதாரம் - அடிமூலம்
மேஷம் - மேழம்
மேகம் - முகில்
மேஸ்திரி - கண்காணி
மைத்துனன் - அளியன், கொழுந்தன்
மையம் - நடுவண்
மோகனம் - முல்லைப் பண்
மோகினி - மாயை
மோசம் - கேடு
மோக்ஷம் - வீடு

மௌனம் - வாய்வாளாமை
யசமான் - தலைவன்
யதார்த்தம் - உண்மை
யமன் - கூற்றுவன்
யாத்திரை - வழிப்போக்கு
யாகம் - வேள்வி
யாசகம் - இரப்பு
யுகாதிபண்டிகை - தெலுங்கு ஆண்டுப் பிறப்பு
யுத்தம் - போர்
யோக்கியம் - தகுதி
யோகம் - ஓகம்
யோசி - எண்ணு
யௌவனம் - இளமை
ரகசியம் - கமுக்கம், குட்டு
ரசாயனம் - சாற்றியம்
ரசீது - பற்றுமுறி
ரணம் - புண்
ரத்தினம் - மணி
ரத்து - தளவு
ரதம் - தேர்
ரதாரோகணம் - தேரேற்றம்
ரஜா - விடுமுறை
ரஸ்தா - சாலை
ரக்ஷை - காப்பு
ராகம் - பண்
ராசி - நேர்முகம்
ராஜன் - அரசன்
ராஜிநாமா - வேலைவிடுகை
ரிஷபம் - விடை
ரிஷி - முனிவன்
ருசி - சுவை
ருஜுப்படுத்தல் - மெய்ப்பித்தல்
ரூபகம் - ஈரொற்று (தாளம்)
ரூபாரூப - உருவுருவிலா
ரொக்கம் - மொத்தப்பணம்
ரோமம் - மயிர்
லகிமா - நொய்ம்மை
லங்கோடு - கவான்துணி
லஞ்சம் - கையூட்டு
லட்டு - இனிப்புருண்டை
லத்தி - குணில்
லய - ஒழுக்கம்
லஜ்ஜை - வெட்கம்
லக்ஷ்மி - திருமகள்
லக்ஷார்ச்சனை - இலக்கவழிபாடு
லாயக்கு - தகுதி
லாயம் - மந்திரம்
லிங்கோற்பவன் - திருவிலங்கம்
லீலை - திருவிளையாடல்
லேவாதேவி - கொடுக்கல் வாங்கல்
லோட்டா - குவளை
லோபம் - இவறல்
லோபி - இவறி, பிசிரி
வக்காலத்து - வழக்காட்டு
வக்கீல் - வழக்கறிஞர்
வசதி - ஏந்து
வசந்தம் - இளவேனில்
வசந்தோற்சவம்-இளவேனில் விழா
வசனம் - உரைநடை
வந்தனம் - வணக்கம்
வம்சம் - கால்வழி
வயது - அகவை
வர்க்கம் - இனம்
வர்த்தகம் - வணிகம்
வருஷம் - ஆண்டு
வருஷாபிஷேகம் - ஆட்டைத் திருமுழுக்கு
வன்மீகநாதர் - புற்றிடங் கொண்டான்

வஜா - வரிக்குறைப்பு
வஸ்தாது - அண்ணாவி
வஸ்து - பொருள்
வஸூல் - தண்டல்
வாகனம் - ஊர்தி
வாசனை - மணம்
வாத்தியம் - இயம்
வாதம் - வேற்றலம்
வாபீஸ் - மீட்சி
வாமி - இடவி
வாய்தா - கெடுவு
வாயு - வளி
வார்த்தை - சொல்
வாரிசு - பிறங்கடை
வாஸ்தவம் - வாய்மை
விகடம் - பகடி
விகற்பம் - வேறுபாடு
விகாரம் - திரிபு
விகுதி - இறுதிநிலை
விசனம் - வாட்டம்
விசாரம் - கவலை
விசாரி - உசாவு
விசாலம் - அகலம்
விசாலாட்சி - தடங்கண்ணி
விசித்துவம் - வயப்படுத்தம்
விசுத்தி - நாவடி
விசுவாசம் - நம்பகம்
விசேடணம் - அடைமொழி
விசேடியம் - அடைகொளி
விசேஷம் - சிறப்பு
விஞ்ஞானம் - அறிவியல்
விஞ்ஞானமய கோசம் - புலம் வியலுறை
வித்தியாசம் - வேறுபாடு
வித்துவான் - புலவன்
வித்தை - கலை
விந்து - விழியம்
விநாயகசதுர்த்தி - பிள்ளையார் நலமி
விநோதம் - புதுமை
விபத்து - இடுக்கண்
வியபிசாரம் - அலவை
வியர்த்தம் - வீண்
வியவகாரம் - வழக்கு
வியாகுலம் - நெம்பலம்
வியாபகம் - வியலம்
வியாதி - நோய்
வியாபாரம் - பண்டமாற்று
வியாஜம் - தலைக்கீடு
விரதம் - நோன்பு
விருச்சிகம் - நளி
விருத்தாசலம் - முதுகுன்றம்
விருத்தாப்பியம் - மூப்பு
விருத்தி - ஆக்கம்
விரோதம் - பகை
விவாகம் - திருமணம்
விஸ்தீரணம் - பரப்பு
விஷம் - நஞ்சு
விஷயம் - பொருள்
விஜயதசமி - வெற்றிப்பதமி
வீரன் - வயவன்
வேசி - விலைமகள்
வேதம் - மறை
வேதாரண்யம் - மறைக்காடு
வைசியன் - வணிகன்
வைத்தியம் - பண்டுவம்
வைராக்கியம் - விடாப்பிடி
ஜ்வரம் - காய்ச்சல்
ஜட்கா - குதிரைவண்டி
ஜதை - இணை

ஜப்தி - பறிமுதல்
ஜம்புத்தீவு - நாவலம்பொழில்
ஜமீன் - வேளகம்
ஜமீன்தார் - கிழார்
ஜயம் - வெற்றி
ஜரிகை - மின்னிழை
ஜல்தி - சுருக்காய்
ஜல்லிக்கட்டு - சல்லிக்கட்டு
ஜலதோஷம் - தடுமம்
ஜவாப் - பொறுப்பு, மறுமொழி
ஜவான் - இளையுன்
ஜன்மம் - பிறவி
ஜன்னல் - பலகணி
ஜன்னி - இசிவு
ஜனசங்கியை - குடிமதிப்பு
ஜனம் - நரல்
ஜனன மரணம் - பிறப்பிறப்பு
ஜாக்கிரதை - விழிப்பு
ஜாகிர்தார் - மானியத்தார்
ஜாகை - தங்கிடம்
ஜாட்டி - தாற்றுக்கோல்
ஜாதகம் - பிறப்பியம்
ஜாதி - குலம்
ஜாப்தா - பட்டி
ஜாமீன் - பிணை
ஜால்ரா - கொச்சம்
ஜாலர் - சிங்கி
ஜாலக் - திறமை
ஜாஸ்தி - மிகுதி
ஜிகினா - குருநாகத்தகடு
ஜிப்பா - குடித்துணி
ஜில்லா - கோட்டம்
ஜீரணம் - செரிமானம்
ஜீரணோத்தாரணம்- பழுதுபார்ப்பு
ஜீரா - பாகு
ஜீவன் - உயிர்
ஜீவனம் - பிழைப்பு
ஜீவியம் - வாழ்க்கை
ஜீனி - சேணம்
ஜெண்டா - கொடி
ஜெபம் - மன்றாட்டு
ஜேப் - சட்டைப்பை
ஜேஷ்ட - மூத்த
ஜோதி - சுடர்
ஜோதிடம் - கணியம்
ஜோதிடன் - கணியன்
ஜோர் - நேர்த்தி
ஸ்கந்தசஷ்டி - முருக அறமி
ஸ்தாபனம் - நிறுவனம்
ஸ்திதி - நிலை
ஸ்தாயி - நிலையி
ஸ்திரீ - பெண்டு
ஸ்துதி - போற்றி
ஸ்தூலம் - பருவியல்
ஸ்நானம் - குளியல்
ஸ்வீகாரம் - தத்தெடுப்பு
ஸர்க்கார் - அரசினர்
ஸலாம் - கையெடுப்பு
ஷர்பத் - தேறல்
ஷரத்து - நிலைப்பாடு
ஷரா - குறிப்பு
ஷராப்பு - நகைக்கடை
ஷோக் - பகட்டு
க்ஷணம் - நொடி
க்ஷவரம் - மழிப்பு
க்ஷீணம் - மங்கல்
க்ஷேமம் - ஏமம்
ஹுக்கா - சுங்கான்
ஹோதா - தகுதி
ஸ்ரீ - திரு

## ஆங்கிலச்சொல் - தமிழ்

Abbreviation - சொற்குறுக்கம்
Absent - வரவில்லை
Absolute construction - தனிநிலை யமைப்பு
Abstract noun - பண்புப்பெயர்
Academic council - கலைமன்றக் குழு
Academy - கலைமன்றம்
Accent - அசையழுத்தம்
Accident - துன்பநேர்ச்சி
Acousitc phonetic - கதுவொலியம்
Active voice - செய்வினை
Acute - எடுப்பு
Adjective clause - பெயரெச்சக் கிளவியம்
Adjective phrase - பெயரெச்சத் தொடர்மொழி
Admission - சேர்ப்பு
Adventure - துணிசெயல்
Adverb clause - வினையெச்சக் கிளவியம்
Adverbial phrase - வினையெச்சத் தொடர்மொழி
Adeversative conjunction - மாறிணைப்புச் சொல்
Aerodrome - வானூர்தி நிலையம்
Affirmative - உடன்பாட்டு (வினை)
Affricate - மெல்லுரசி
Aftergrowth - மறுவிளைச்சல்
Agent - முகவர்
Agglutinative - கொளுவுநிலை
Air-conditioned - செந்தண நிலைப்பாடு
Apartheid - தனிமுன்னேற்ற
Apical - நுனியண்ண
Apple - அரத்தி
Aspirated - மூச்சொலி
Alliteration - மோனை
Aphesis - முதற்குறை
Apcope - கடைக்குறை
Apostroph - தொகுநிலைக் குறி
Approximation - குத்துமதிப்பு
Aim - நோக்கம்
Allophones - அல்லொலியன்கள்
Almirah - நிலைப்பேழை
Alteration - திரித்தல்
Alternative conjunction analogy - ஒப்பு
Analysis - கூறுபடுப்பு
Analytical - பிரிநிலை
Anamolous verb - வழுவமைதி வினை
Anatomy - அக்கூறுப்பு
Antecedent - முன்னின்றைப் பெயர்
Anticlimax - மேண்மேல் தாழ்ச்சி
Antidote - மாற்று
Antithesis - பல்பொருள் முரண்
Anthropology - மாந்தனூல்
Arch Bishop - கண்காணியார்
Archeology - தொல்பொருட்சாலை
Aristocracy - சீரியோராட்சி
Art - கம்மியம்
Articles - உருப்படிகள்
Articulate - இழைத்தல்
Articulatory phonetics - பலுக்கொலியம்
Artist - கம்மியன், ஓவியன்
Assonance - ஒலிப்பொலி
Asterisk - விடுபாட்டுக்குறி

Astronomy - வானநூல்
Atheists - நம்பாமதத்தார்
Attendance - வரவுப்பதிவு
Auto-biography - தன் வரலாறு
Auxiliary verb - துணைவினை
Badminton - பூப்பந்து
Bachelor of Arts - இளங்கலைஞர்
Band - கூட்டியம்
Bank - வைப்பகம்
Baptist - தீக்குளிப்பு
Bar-at-law - சட்டப்பாரர்
Barbarism - கொச்சை நடை
Basket ball - கூடைப் பந்து
Bat - மட்டை
Bench - விசி
Benedictory - வாழ்த்து
Biplane - இரட்டைச் சிறை வானூர்தி
Bishop - மேற்காணியார்
Blotting paper - மையொற்றி
Boarding school - விடுதிப்பள்ளி
Book-keeping - கணக்கு வைப்பு
Botany - பயிர்நூல்
Brackets - பிறைக்கோடுகள்
Brevity - சுருக்கம்
Brush - தூரிகை
Bureaucracy - அலுவலராட்சி
Business - தொழில்முறை
Butler - பரிமாறி
Calculate - கணித்தல்
Camera - படம் பற்றி
Camp - தங்கல், தாவளம்
Cannibalism - நரவூனுண்ணல்
Cannon - குண்டுக்குழாய்
Capitalism - தனியுடைமையாட்சி
Casual verb - பிறவினை
Celibates - தனி வாழ்க்கையர்
Cement - சுதை நீறு
Census - குடிமதிப்பு
Centre - நடுவம்
Chalk - சீமைச் சுண்ணம்
Challenge - அறைகூவல்
Champion - வல்லான்
Chance - வாய்ப்பு
Charter - அமைப்புப் பட்டயம்
Chemistry - சாற்றியம்
Cheque - காசோலை
Cinema - திரைப்பட்டம்
Chief Justice - தலைமைத் தீர்ப்பாணையர்
Circle - வட்டம்
Circumflex - நலிபு
Circus - வட்டக்காட்சி
Civil - குடிமை
Civil case - உரிமை வழக்கு
Class dialect - குலவழக்கு
Climax - மேன்மேலுயர்ச்சி
Clause - கிளவியம்
Coach - வையம்
Coat - மேற்கட்டை
Coffee - குளம்பி
Collect - தண்டு
Collection - தண்டலர்
Colloquial Dialect - உலகவழக்கு
Colon - முக்காற்புள்ளி
Comma - காற்புள்ளி
Communism - பொதுவுடைமை
Competition - போட்டி
Complement - நிரப்பியம்
Complex - கலப்பு
Compound - கூட்டு, வளாகம்
Compounding - புணர்நிலை
Compound Tense - கலவைக் காலம்

Comparative - உறழ்தரம்
Company - குழும்பு
Concepts - கருத்தமைவுகள்
Concord - இசைவு
Concurrent list - உடனொத்தபட்டியல்
Condensed sentence - புணர்நிலையணி
Condition - நிலைப்பாடு
Confusion of words -சொன் மயக்கம்
Congress party - பேராயக் கட்சி
Conjugation - வினைபுடை பெயர்ச்சி
Conjunction-இணைப்புச்சொற்கள்
Consider - கண்ணு
Constitution - சட்ட அமைதி
Contraction - சுருக்கல்
Copula - இணைப்பு வினை
Conservatism - பழமை போற்றல்
Conversion - மாற்றல்
Cork - தக்கை
Corporation - மாநகராண்மை
Corrupted words - மரூஉச் சொற்கள்
Corruption - சிதைவு
Course - கடவை
Court - மன்றம்
Cricket - மண்டிலப்பந்து
Criminal case - குற்ற வழக்கு
Critical - நோட்ட
Criticism - திறனாய்வு
Cub-pack - குருளையர் குழு
Cubs - குருளையர்
Cumulative Conjunction - கூட்டிணைப்புச் சொல்
Cyclone - புயல்
Cyclostyle - கல்லச்சடி
Cyclopen - கல்லச்செழுதுகோல்
Dash - கீற்று
Dead language - வழங்காமொழி
Declarative sentence - விளம்பு வாக்கியம்
Definition - வரையறை
Degradation - இழிபு
Degree of Comparision - ஒப்பீட்டுத்தரம்
Democracy - குடியரசு
Demography - மக்களியல்
Demonolatry - பேய் வணக்கம்
Denial - மறுதலிப்பு
Department - திணைக்களம்
Depotism - கொடுங்கோலாட்சி
Deputies - படிநிகரியர்
Derivative - திரிமொழி
Developing countries - வளர்நாடுகள்
Dialects - நடைமொழிகள்
Diarchy - இரட்டையாட்சி
Dichotomy - இரட்டைப்பகுப்பு
Dictate - சொல்வி எழுதுவி
Dictator - தன் மூப்பாளன்
Dictatorship - தன் மூப்பாட்சி
Digest - செய்திச் சுருக்கம்
Diphthongs - புணரொலிகள்
Direct - ஆற்றுப்படுத்து
Director - இயக்குநர்
Direct speech - நேர்க்கூற்று
Discardance of Inflection - ஈறுகெடல்
Discipline - கட்டொழுங்கு
Disguise - மரூஉ
District - மாவட்டம்
Doctor - பண்டுவர், பண்டாரகர்

Doctrine - சித்தாந்தம்
Dorsal - அடியண்ண ஒலி
Double Dashes - இடைப்பிற வைப்புக் குறி
Drawing - ஓவியம்
Driver - வலவன்
Duster - துடைப்பான்
Earl - வேள்
Electric train - மின்தொடர் வண்டி
Elegy - கையறம்
Elevation - உயர்வு
Embassy - தூதாண்மை
Embrayology - கருநூல்
Emphasis - வன்புறை
Endogamous - அகமணம்
Engine - சூழ்ச்சியம்
Engineer - சூழ்ச்சிய வினைஞர்
Entrance Examination - புகவுத் தேர்வு
Entrance ticket - புகவுச் சீட்டு
Eocene - விடியன்மை
Epenthesis - இடைமிகை
Epigram - ஒருபொருள் முரண்
Epithesis - கடைமிகை
Epithets - அடைமொழிகள்
Equator - நண்ணிலக்கோடு
Equivocation - இரட்டுறல்
Era - ஊழி
Erroneous - வழுவுச் சொற்கள்
Escalator - சுழற்படிக்கட்டு
Ethics - ஒழுக்கநூல்
Etymology - சொற்பிறப்பியல்
Executive - நிறைவேற்றுத் துறை
Euphemism - தகுதி வழகு
Euphony - இனிமை
Evacuation - பதியெழுகை
Evacuee - வெளியேறி
Evening bazaar - அல்லங்காடி
Evolution - விரிவளர்ச்சி
Exchange - மாறு
Excursion - புறப்போக்கு
Execute - முடிவேற்று
Exogamous - புறமணம்
Experiment - ஆய்வு
Extension - விரிபு
Fair copy - செவ்வைப்படி
Fair note-book - செவ்வைக் குறிப்புப் புத்தகம்
Fascism - கட்டுடைமையாட்சி
Faucal - தொண்டையொலி
Fauvourotism - கடுங்கண்ணோட்டம்
Federation - கூட்டரசு
Feudalism - சிற்றரசு
Fiddle - கின்னரி
Field - களம்
Finals - இறுதி
Fine Arts - கவின்கலைகள்
Flexionnal - பகுசொன்னிலை
Foreign Idioms - அயல்வழக்கு
Foreign Language - அயன்மொழி
Forest Department - அடவித்துறை
Form - படிவம்
Fossils - கல்லுடம்பு
Fountain pen - ஊற்றுத் தூவல்
Frontal - இடையண்ண ஒலி
Full stop - முற்றுப்புள்ளி
Funel - வைத்தூற்றி

Funeral - பள்ளிபடை
Game - விளையாட்டு
Gang - கும்பு
Garage - இயங்கிக்கொட்டில்
Gate - புறவாயில்
Geneological method - கொடிவழி முறை
Genus - பிறந்தை
Geography - திணை நூல்
Good evening - வணக்கம்
Good morning - வணக்கம்
Goods train - சரக்குத் தொடர்வண்டி
Governor - ஆள்நர்
Gramaphone - ஒலினி
Grand howl - பேரூளை
Grand Father - பாட்டன்
Grant - நல்கை
Graph - கொட்டறைக் கணக்கு
Graph paper - கொட்டறைத் தாள்
Great Grand Father - பூட்டன்
Group - குழாம்
Guild - குழுமம்
Gun - துமுக்கி
Hearing - வழக்குக்கேள்வி
Heats - வெள்ளோட்டம்
Herd - தொழுதி
High Jump - உயரத்தாண்டு
Hijacking - ஊர்திமடக்கம்
Historical Science - ஆக்கக்கலை
Hoarding - தேக்கி வைப்பு
Hobby - பற்றாட்டு
Hockey - வளரி
Home Rule - தன்னரசு
Homonym - பலபொருள் ஒரு சொல்
Honourable - மதிதகு
Hostel - விடுதி
Hostel boy - விடுதி மாணவன்
Humanity - மன்பதை
Humanistic - மன்னியல்
Hunger strike - தவப்பழி
Hybrid - இருபிறப்பு
Hyperbole - உயர்வு நவிற்சி
Hyphnated - இடைக்கோடிட்ட
Hypnotism - அறிதுயில்
Idea - ஏடல்
idiom - மரபுத்தொடர்
Illative conjuction - முடிபிணைப்புச் சொல்
Imaginative - பாணிப்பு
Imperialism - பேரரசு
Inarticulate - முழைத்தல்
Incorporating - பஃறொகை நிலை
Indefinite - செந்நிலை
Indirect speech - நேரல் கூற்று
Infer - ஊகி
Infinitive - நிகழ்கால வினையெச்சம்
Inflectional - பகு சொன்னிலை
Inflectional change - ஈறுதிரிதல்
Insinuation - முன்னவணி
Inspector - உண்ணோட்டகர்
Instinct - தூண்டுணர்ச்சி
Instrument box - கருவிச் செப்பு
Insurance - வைப்புறுதி
Integration - ஒருமைப்பாடு
Intellectual - மதியியல்
Intend - கருதுதல்
Interchange - பரிமாற்றம்
Internal - அகவியல்
Interrogative sentence - வினா வாக்கியம்

Interval - இடையீடு
Interverbial space - சொல்லிடையீடு
Invention - புதுப்புனைவு
Inverted order - முறைமாற்று
Irony - வஞ்சப்புகழ்ச்சி
Judge - நடுவர்
Judiciary - தீர்ப்புத்துறை
Jump - தாண்டு
Jury - அவையம்
Justice Party - நயன்மைக்கட்சி
Kerosine - மண்ணெய்
Laboratory - ஆய்வுக்களம்
Land slide - நிலச்சரிவு
Large Brackets - பகர அடைப்பு
Lateral - அள்ளையன்
Lawyer - வழக்கறிஞர்
Layman - நட்டாமுட்டி
Leaving Certificate - விலகல் தகுதித் தாள்
Leisure - ஓழிவு
Legislature - சட்டத்துறை
Liberalism - தாராளிகம்
Life Insurance - உயிரீட்டு வைப்புநிதி
Lift - தூக்கி
Light House - கலங்கரை விளக்கம்
Likeness - போன்மை
Literary Dialect - நூல்வழக்கு
Living Language - வழங்கு மொழி
Local Dialect - இடவழக்கு
Logic - ஏரணம்
Long Jump - நீளத்தாண்டு
Long Term - நெடுந்தவணை
Lords - பெருமக்கள்
Loudspeaker - உரத்தொலிப்பான்
Lungs - மூச்சுப்பை
Lyric - இசைப்பாட்டு
Machine - பொறி
Magic lantern - ஒளிப்படம்
Manage - மேலாள்
Man eaters - மாந்தனுண்ணி
Manifesto - கொள்கையறிக்கை
Marcquis - எல்லைவேள்
Mark - மதிப்பெண்
Market - அங்காடி
Mass - திரள்
Master of Arts - முதுகலைஞர்
Match - சமனாட்டு
Matriarchy - தாயாட்சி
Matriculation - மேற்கலைப் புகவு
Mediterranean sea - நண்ணிலக் கடல்
Membership - உறுப்பாண்மை
Mesmerism - மனவசியம்
Metal - மாழை
Metanalysis - வழுஉப் பகுப்பு
Metophor - உருவகம்
Metathesis - இலக்கணப்போலி
Metropolitan - தலைமைக் கண்காணியார்
Miocene - சில்லண்மை
Mission - விடையூழியம்
Missionaries - கிறித்தவ விடையூழியம்
Mixed - கதம்ப
Monarchy - கோவரசு
Money order - பணவிடை
Monogeny - ஒருவயிற் பிறப்பு
Monoplane - ஒற்றைச் சிறை வானூர்தி
Monosyllabic - அசை நிலை

Motor - இயங்கி
Motto - மேல்வரிச்சட்டம்
Musical pitch - அலகுமட்டம்
Mutation - போலி
Nationality - நாட்டினம்
Nationalism - நாட்டினப்பற்று
Natural Science - இயற்கை நூல்
Navigator - கடலோடி
Nazism - நாட்டினவுடைமையாட்சி
N.E.C. - தேசியப் படைமாணி
Negation - மறை
Negative - எதிர்மறை
Nepotism - உறவுச்சலுகை
Nomad language - அலைமொழி
Non-aligned - அணிசேராத
Note of exclamation - வியப்புக்குறி
Note of Interrogation - வினாக்குறி
Novel - புதினம்
Noun clause - பெயர்க்கிளவியம்
Noun equivalent - பெயர் நேரி
Noun Phrase - பெயர்த் தொடர்மொழி
Nurse - செவிலி
Object - குறிக்கோள்
Observatory - உடுநிலையம்
Observer - கவனிப்பாளர்
Officer - அலுவலர்
Oil painting - நெய் வண்ணப்பூச்சு
Oligarchy - சில்லோராட்சி
Onomatopoeia - ஒலியணி
Oracle - விரிச்சி
Organiser - அமைப்பாளன்
Outline - சட்டகம்
Overcoat - புறமேற்சட்டை
Oxymoron - எதிர்நிலை முரண்
Pacific ocean - அமைதிவாரி
Packet - பைக்கட்டு
Parade - மெய்க்காட்டு
Paragoge - மிகைச் சொற்கள்
Paragraph - பாகி
Paraphrasing - பொழிப்புரை வரைவு
Parcel - சிப்பம்
Paronomosia - எதுகை முரண்
Paranthesis - இடைப்பிற வைப்பு
Passive voice - செயப்பாட்டு வினை
Passenger - வழிப்போகி
Passport - கிள்ளாக்கு
Past participle - இறந்தகால வினையெச்சம்
Patriarchy - தந்தையாட்சி
Patriotism - நாட்டுப்பற்று
Patron - ஊட்டகர்
Pen - தூவல்
Pencil - எழுதுகோல்
Peninsula - தீவக்குறை
Perfect - நிறைவு
Perfect continuous - நிறைவுத் தொடர்ச்சி
Period - பிரிவேளை
Periphrasis - வளைகூற்றணி
Permutation of letters - போலி
Personification - ஆட்படையணி
Perspicuity - தெளிவு
Petrol - கன்னெய்
Philosophy - பட்டாங்கு நூல்
Phonemes - தனியொலியன்கள்
Phonology - ஒலிநூல்
Photo - ஒளிப்படம்
Photograph - ஒளிப்படம்

Phrase - தொடர்மொழி
Physical science - இயற்கலை
Physiology - உடல்நூல்
Pilot - வலவன்
Ping-Pong - மேசைப்பந்து
Plastic - வார்ப்பன்
Pliocene - பல்லாண்மை
Pleistocene - கழி பல்லாண்மை
Poetic Idiom - உரிச்செல்
Poetics - பாட்டியல்
Point - புள்ளி
Polar Region - முனை மண்டலம்
Pole vault - கழைத்தண்டு
Police - ஊர்க்காவல்
Polyandry - பல்கணவம்
Polygeny - பலவயிற்பிறப்பு
Polysynthetic - பல்தொகு நிலை
Positive - ஒப்புத்தரம்
Post Reply Card - மறுமொழி அஞ்சலட்டை
Practical - செயன்முறையான
Precision - திட்டம்
Precoity - இளமுதிர்ச்சி
Prepared - அணியம்
Prest - வரவு
Pre-University - முன்னை வகுப்பு
Primitive language - இயன்மொழி
Principal - முதல்வர்
Principle - நெறிமுறை
Priority - முன்மைநிலை
Process - செய்ம்முறை
Proclamation - சாற்றுதல்
Prochronism - முற்காலப் பகுத்தம்
Profitering - மிகையூதியப் பேறு
Progress Report - தேர்ச்சியறிக்கை
Promotion - உயர்த்தம்
Pronoun - பதிற்பெயர்
Propose - முன்மொழி
Propriety - பொருத்தம்
Prothesis - முதன்மிகை
Provincial Dialect - திசை வழக்கு
Provincial Word - திசைச்சொல்
Proximity - அண்மைநிலை
Pun - மடக்கு
Punctuation - நிறுத்தம்
Purity - தூய்மை
Pyramids - கூர்நுதிக் கோபுரம்
Quarter - கால்வட்டம்
Quotation Marks - மேற்கோட் குறி
Reader - துணைப் பேராசிரியர்
Readiness - அணியம்
Recent - அண்ணணியம்
Recess - இடைவேளை
Reconstruction - மறுவமைப்பு
Redundance - மிகைபடக்கூறல்
Referee - பொதுவர்
Referendum - கருத்தெடுப்பு
Reflective pronoun - தற்சுட்டுப் பெயர்
Refuge - புகல்
Refugee - புகலி
Refutation - மறுப்பு
Regional dialect - திணை வழக்கு
Regional language - வட்டார மொழி
Registrar - பதிவாளர்
Registrar's office - ஆவணக்களரி
Rehearsal - ஒத்திகை
Relay - கடத்தி
Renaissance - மறுமலர்ச்சி
Republic - மக்களாட்சி

Reserve bank - ஏமவைப்பகம்
Reserve police force - ஏமக் காவற் படை
Resonant - சிலம்பும்
Resolution - தீர்மானம்
Resource - வருவாய்
Rest - ஒய்வு
Restriction - வரையறை
Result - விளைவு
Retire - ஓய்
Retrospective effect - பின்னோக்கிய விளைவு
Rhetoric - அணியியல்
Rhyme - எதுகை
Rickshaw - நரவண்டி
Ridiculous terms - இகழ்ச்சிச் சொற்கள்
Right honourable - மிகமதிதகு
Ring tennis - வளைபந்து
Road transport - சாலைகடத்தம்
Rovers - திரிநர்
Rough draft - கரட்டு வரைவு
Rough note book - கரட்டுக் குறிப்புப் புத்தகம்
Rubber - தேய்வை
Rule - விதி
Rural life - நாட்டு வாழ்க்கை
Sailor - கலவர்
Samsonhood - மதவலிமை
Sando - மதவலி
Sanitation - நல்வழி
Sarcasm - அங்கதவணி
Satellite towns - சார் நகர்கள்
Savage - விலங்காண்டி
Savings - மீத்தம்
Screening committee - வடிப்புக்குழு
Scout troup - சாரணப்படை
Sea-plane - கடல் வானூர்தி
Security - காப்புறுதி
Self determination - தன்னின்றையம்
Semicolon - அரைப்புள்ளி
Senate - மூப்பரவை
Sequence of tense - காலமுடிபு
Servant - பணியாளர்
Set - தொகுதி
Shield - கேடகம்
Shirt - உட்சட்டை
Shorthand - சுருக்கெழுத்து
Shotput - குண்டெறிவு
Signature - கைந்நாட்டு
Simile - உவமை
Sin - கரிசு
Sky scrapers - வானளாவிகள்
Slang usage - இழிவழக்கு
Slang words - இழிசொற்கள்
Slip test - நறுக்காய்வு
Socialism - கூட்டுடைமை
Solar system - கதிரவக் குடும்பம்
Soldier - பொருநன்
Solicitor - மன்றாடியார்
Sound box - ஒலிக் கரண்டகம்
Soup - நீட்டாணம்
Spanner - தக்கை முறுக்கி
Speak against - வெட்டிப் பேசு
Speak for - ஒட்டிப் பேசு
Species - இனங்கள்
Spiritual- அவியியல்
Sports- பந்தய விளையாட்டு
Stainless steel- வெள்ளிரும்பு
Staff- பணிக்குழு

State language- நிலை மொழி
Steering Committee- மீகான் மைக்குழு
Sterilization- மலடாக்கம்
Stool- மொட்டான்
Straits- நீரிணைப்பு
Stratocracy- படையாட்சி
Structure of Sentence - வாக்கிய அமைப்பு
Subscription - கையொப்பம்
Substitute - பதிலி, பகரம்
Superlative - உயர்தரம்
Superstructure - மேற்படையமைப்பு
Supervision - மேற்பார்வையாளி
Supreme court - உம்பரற மன்றம்
Surgeon - அறுப்பு மருத்துவர்
Surgery - அறுவை
Surprise test - திடுந்தேர்கை
Swan - ஓதிமம்
Syncope - இடைக்குறை
Syndicate - ஆட்சிக்குழு
Synonymous - ஒருபொருட் பல சொல்
Syntax - சொற்றொடரியல்
Synthesis - ஒன்றுசேர்ப்பு
Synthetic - தொகுதிநிலை
Table - நிலைமேடை
Taluk - கூற்றகம்
Target - எய்குறி
Tautology - கூறியதுகூறல்
Team - கன்னை
Technology - கம்மியம்
Telegram - தொலைவரி
Telepathy - தொலையுணர்வு
Telescope - தொலையாடி
Tempest - சூறாவளி
Tenet - கோட்பாடு
Tennis - மட்டைப்பந்து
Tent - கூடாரம், படமாடம்
Theist - நம்புமதத்தார்
Theology - மதநூல்
Think - முன்னு
Thrift - சிக்கனம்
Tinocracy - உடைமையோராட்சி
Tolerance - பொறுதி
Tonic - ஒலியல்
Tournament - பெரும்பந்தய விளையாட்டு
Tram - மின்சாரவண்டி
Transfered Epithet - சார்ச்சி வழக்கு
Transference - மாற்றம்
Transliteration - ஒலிமுறை வரிபெயர்ப்பியல்
Treasure - கருவூலம்
Treasury - கருவூலகம்
Trible - குக்குலம்
Troop - தண்டு
Turn - தடவை
Tutor - திருத்தாளர்
Typewriter - தட்டச்சுப்பொறி
Typist - தட்டச்சாளர்
Tyranny - கொடுங்கோலாட்சி
UNESCO - ஒன்றிய நாட்டினங்களைச் சேர்ந்த கல்வியறிவியற் பண்பாட்டு அமைப்பகம்
Uniform - ஓரியல்
Uniformity - ஓரியன்மை
Union -. ஒன்றியம்
United Kingdom - ஒன்றிய அரசியம்

Universe - பேருலகம்
Usage - வழக்கு
Viceroy - துணையரையர்
Ventilator - ஒளியதர்
Veto - வெட்டதிகாரம்
Vocative - விளி
Voiced stop - முழங்கு நிறுத்தம்
Voiceless - முழங்காத
Volume - மடலம்
Vote - குடவோலை
V.P. Parcel - கட்டிப்பெறு பொதி
Vulgar - இடக்கர்
Ward - குடும்பு
Weekly - கிழமையன்
Wind - வளி
Witness - கரி
Wireless - கம்பியிலி
Wireless Telegraph - கம்பியிலாத் தொலைவஞ்சல்
Words in pairs - இணைமொழிகள்
Writer - எழுத்தாளர்
Xenocracy - வேற்றரசு
X- ray - உட்காட்டி
Zoology - விலங்கு நூல்
Zeppin - வானக்கப்பல்

# 4. பிறமொழி இயற்பெயர்களைத் தமிழில் எழுதும் மரபு

ஒருமொழியில் உள்ள ஒலிகள் அனைத்தும் வேறொரு மொழியில் இருப்பது அரிது. ஆங்கிலத்தையும் தமிழையும் ஒப்பிட்டால், ஆங்கிலத்தில் உள்ள B, D, F, G, H, J, W, X, Z ஆகிய ஒலிகளுக்குரிய எழுத்துகள் தமிழில் இல்லை. அதுபோல் தமிழில் உள்ள ண, ந, ழ, ள முதலிய ஒலிகளுக்குரிய எழுத்துகள் ஆங்கிலத்தில் இல்லை. 'யாழ் மொழி' என்ற தமிழ்ப் பெயரை ஆங்கிலத்தில் 'Yaal moli' என்றுதான் எழுத முடியும். சிலர் இதை 'Yaazh mozhi' என்று எழுதினாலும் 'zh' என்பது 'ழ்' என்பதன் சரியான ஒலியைத் தருவதில்லை.

இதுபோல் February என்ற சொல்லைத் தமிழில் 'பிப்பிரவரி' என்றுதான் எழுதமுடியும். ஆனால் தமிழர் சிலர் 'F' என்ற ஆங்கில எழுத்தைக் கடன்வாங்கி 'ெFப்ரவரி' என்றோ 'Feப்ரவரி' என்றோ எழுதுகின்றனர். இதுபோன்ற அறியாமை ஆங்கிலேயரிடம் இல்லை. அவர்கள் தமிழ் என்ற சொல்லை ஆங்கிலத்தில் Tamil என்றுதான் எழுதுகிறார்கள். ழ் என்ற ஒலி ஆங்கிலத்தில் இல்லையே என்று அதை ஒரு குறையாக எண்ணித் தமிழ் ழகரத்தைக் கடன்வாங்கி 'Tamiழ்' என்று எழுதுவதில்லை.

தமிழ்மொழியின் சொற்களில் எழுத்துகள் கண்டபடி அமைவதில்லை. மொழி முதலிலும் இறுதியிலும் இன்ன எழுத்துகள் வர வேண்டும், மொழியிடையில் இன்ன எழுத்தை அடுத்து இன்ன எழுத்து வர வேண்டும் என்ற வரையறைகள் உண்டு. இந்த வரையறைக்கு இயையாத பிறமொழிச் சொற்களைத் தமிழில் எழுதநேரும் போது, அவற்றைத் தமிழ் ஒலி மரபின்படித் திரித்துத் தமிழ் எழுத்துகளாலேயே. எழுத வேண்டும் என்பது தான் தொல்காப்பியர், நன்னூலார் முதலிய

முன்னோர்களின் கொள்கை. திருத்தக்கதேவர், கம்பன் முதலிய பெரும்புலவர்கள் தம் இலக்கியங்களில் கடைப்பிடித்த நெறியும் இதுவே. இதற்குக் கம்பனைச் சான்றாகக் காட்டலாம்.

1. கம்பன் தமிழ் மரபுக்கியைய அமையாத வடமொழி இயற்பெயர்கள் சிலவற்றைத் தமிழில் மொழிபெயர்த்துக் கொள்கிறான். காட்டு: ருஸ்ய மூகபர்வதம் - இரலைக் குன்றம், இரண்யாக்ஷன் - பொன்கண்ணன்.

2. மொழிபெயர்க்க இயலாத சிலவற்றைத் தமிழ் ஒலிமரபுக் கேற்பத் திரித்தாள்கிறான். காட்டு: லக்ஷ்மண - இலக்குவன், அஹல்ய - அகலிகை.

முன்னோர்தம் இம்மரபினைப் பாவாணர் பொன்னே போற் போற்றிக் கடைப்பிடிக்கிறார். அவர் தமிழிற் கலந்துள்ள, அல்லது தமிழில் எழுத நேரும் பிறமொழிச் சொற்களைத் தமிழ் மரபுக்கேற்ப அமைப்பதில் பின்வரும் 4 நெறிப்பாடுகளைப் பின்பற்றுகிறார்:

1. பிறமொழிச் சொற்களை விலக்கி, அவற்றுக்கு நேரான தனித்தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துகிறார். காட்டு: அபாயம்-ஏதம், அபூர்வம் - அருமை.

2. பிறமொழிச் சொற்களுக்கு நேரான தனித்தமிழ்ச் சொற்கள் இல்லாதவிடத்து, அவற்றைப் புதியனவாகப் படைத்துக் கொள்ளுகிறார். காட்டு: மாதிரி - போலிகை, Margin-வரந்தை.

3. பிறமொழி இடப்பெயர், ஆட்பெயர் முதலிய இயற்பெயர் (Proper Nouns)களில் காரணப்பெயர்களாக உள்ளவற்றைத் தமிழில் மொழிபெயர்த்துக் கொள்கிறார். காட்டு: oxford - எருதந்துறை, Mediterranean sea - நண்ணிலக்கடல்.

4. காரணம் விழிப்பத் தோன்றாத இயற்பெயர்களைத் தமிழ் ஒலிமரபுக்கேற்பத் திரித்தாள்கின்றார். காட்டு: Francisco-பிரான்சிசுக்கோ, Rapp - இராப்பு, August - ஆகத்து.

இந்த நாலாம் மரபைக் கடைப்பிடித்து Shakespeare, Washington, Robert Browning என்ற பெயர்களைத் தமிழில் எழுதினால், அவை முறையே சேக்கசுப்பியர், வாடிங்குடன், இராபர்த்துப் பிரவுனிங்கு என்று உருத்தெரியாமல் மாறிவிடுகின்றன என்பதும் உண்மைதான். இப்பெயர்களை அவற்றுக்கான ஒலியுடனேயே தமிழில் ஒலிக்க வேண்டும் என்றும், அதற்கான ஒலிகள் இல்லாதது தமிழின் குறைபாடு என்றும் சிலர் கருதுகின்றனர். இது சரியான மொழிக் கோட்பாடாகாது. இதற்காகப் பிறமொழி எழுத்துகளைக் கடன் வாங்குவதும், புதிய குறிகளை உருவாக்குவதும், மொழி முதலிடை கடை எழுத்து மரபுகளை மீறுவதும் செய்யலாம் என்பது சிலர் கருத்து. இவ்வாறு கருதுவோரில் பாரதியாரும் ஒருவரே. 'இக்குறையைக் களையத் தாமே சில புதிய குறிகளை உருவாக்கி வைத்திருப்பதாக அவரே கூறியிருக்கின்றார். இதனை அப்போதே கண்டித்த கப்பலோட்டிய தமிழர் வ.உ.சிதம்பரனார், "பாரதியார் தமிழ்மொழியைத் திருத்த முற்படுகிறாரா? வருத்த முற்படுகிறாரா?" என்று மறுப்புக் கட்டுரை எழுதியிருக்கிறார் (ஞானபானு, செப். 1915).

**பாவாணர், எம்மொழி இயற்பெயர்களும் தமிழ் ஒலிமரபின்படித் திரிக்கப்பட்டுத் தமிழ் எழுத்துகளைக் கொண்டே எழுதப்படல் வேண்டும்** என்ற கொள்கையில் உறுதியானவரே.

இதனைத் தம் நூல்களில் அவர் ஆங்காங்குப் பயன்படுத்தும் அயல்மொழி ஆட்பெயர் இடப்பெயர்களைத் தமிழில் எழுதும் முறை கொண்டு தெளியலாம். இதற்கான இலக்கண விதிகளையும் அவர் 'உடம்பொடு புணர்த்தலாக' உணர்த்தியிருப்பதாகவும் கொள்ளலாம்.

அவ்வாறு எழுதப்பட்ட இயற்பெயர்களில் சிலவற்றை அடியிற் காணலாம். அவற்றிலிருந்து, எந்த எந்த அயன்மொழி எழுத்து எப்படி எப்படித் தமிழ்மரபுக்கேற்பத் திரித்தமைக்கப் பட்டுள்ளன என்பதை உன்னித்து அறிந்துகொள்ளலாம்.

## ஆங்கில இயற்பெயர் - தமிழ்

**A**ltaic - ஆலத்தேயம்
Athens - ஏதென்சு
August Schleicher - ஆகத்துக் கிளேச்சர்
**B**abel Mandeb - பாபெல் மந்தெபு
Baltic - பாலத்திபம்
Basque - பாசுக்கு
Bombay - வேம்பாய்
Breds dorff - பிரெட்சு தார்ப்பு
Bristol - பிரித்தல்
British - பிரித்தானிய
Brushman - பசுமன்
**C**eltic - செலத்தியம்
Constantius Beschi - கான்சுத்தாந்தியசு பெசுக்கி
Coptic - கோபதியம்
**E**dward Sapir - எடுவருடு சப்பீ
Ernest Droese - ஏரணத்துத் துரோசு
Eskimo Aleut - எசுகிமோ அலியத்து
Esperanto - எசுப்பெரன்றோ
Etruscan - எத்திரசுக்கன்
**F**abricius - பெப்பிரியசியசு
Fillioza - பில்லியோசா
Francisco - பிரான்சிசுக்கோ
FranzBopp - பிரான்சு பாப்பு
Frederic Bodmer - பிரடெரிக்கு பாடுமேர்
Frohn meyer - பிரண்மேயர்
**H**amitic - ஆமியம்
Hebrew - எபிரேயம்
Herodotus - எரோதாத்தசு
Hitler - இற்றிலர்
Hittite - இத்தைத்தம்
Honduras - ஒண்டூராசு
Hottentot - ஆட்டன்றாட்டு
**I**roquoian - இரேக்குவாயன்
Israel - இசரவேல்
**J**acogrimm - யாக்கோபுகிரிம்
Jespersen - செசுப்பெர்சென்
John - யோவான்
John Beames - சாண் பீம்சு
Johnson - சாண்சன்
Josiah Dwight Whitney - யோசியா துவைத்து விற்றினி
**K**arl Marx - காரல் மார்க்கசு
Kittel - கிற்றெல்
**L**ahohvary - இலாகோ வாரி
**M**alto - மாலத்தோ
Maxmuller - மாக்சு முல்லர்
Mexico - மெகசிகோ
**N**atchez Muskogeam - நாச்செசு மசுக்கோசியம்
**O**tto Bohtlingk - ஆட்டோ போத்திலிங்கு
**P**alestine - பலத்தீனம்
Pope - போப்பு
Pott - பாட்டு
Plato - பிளேற்றோ
**R**app - இராப்பு
Ritwan - இரித்துவான்
Roentgen - இராண்டுசென்

Rottler - இராட்டிலர்

Rudolph Roth - உருடால்புராத்து

Sclater - கிளேற்றர்

Sir Charles Wilkins - வயவர் சாள்சு வில்கின்சு

Sheffield - செப்பீல்டு

Sir William Jones - வயவ வில்லியம் சோன்சு

Skeat - கீற்று

Spanish - இசுப்பானியம்

St. Paul - திருப்பவுல்

Tavernier - தேவர்னியர்

Tlingit - திலிங்கித்து

Tsim Shian - சிமிசியம்

Vincent - வின்சென்று

Vincent Stuart - வின்சென்று தூவர்ட்டு

Webster - வெபுத்தர்

Williar Stuart - வில்லியம் தூவர்ட்டு

Winslow - வின்சுலோ

# துணை நூல்கள்


இயற்றமிழ் இலக்கணம் - ஞா. தேவநேயப்பாவாணர், தமிழ் மண் பதிப்பகம், சென்னை, மறுபதிப்பு, 2000.

இலக்கணக் கட்டுரைகள் - ஞா. தேவநேயப்பாவாணர், தமிழ் மண் பதிப்பகம் சென்னை, முதற்பதிப்பு, 2001.

உயர்தரக் கட்டுரை இலக்கணம் - முதற்பாகம் - ஞா. தேவநேயன், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1950.

உயர்தரக் கட்டுரை இலக்கணம் - இரண்டாம் பாகம் - ஞா. தேவநேயன், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1951.

ஒப்பியன் மொழி நூல், 1, 2, தமிழ் மண் பதிப்பகம், சென்னை.

கட்டுரை வரைவியல் - ஞா. தேவநேயன், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மறு அச்சீடு, 1952.

கம்பராமாயணம் மூலம் - வானதி பதிப்பகம், சென்னை, 2002.

சீவக சிந்தாமணி மூலமும் உரையும் - உ.வே.சா. பதிப்பு 1949, சென்னை.

செந்தமிழ்ச் செல்வி - சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, நவம்பர், 1951.

தமிழர் மதம், பாவாணர், தமிழ் மண் பதிப்பகம், சென்னை.

தொல்காப்பியம், சொல்லதிகாரம், சேனாவரையர் உரை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1959.

நன்னூற் காண்டிகையுரை - ஆறுமுக நாவலர், 1953.

பெரியபுராணம் - காசித் திருமடம், திருப்பனந்தாள் - 2002.

பேரகத்தியத்திரட்டு, வண்ணனை மொழிநூல் வழுவியல், பாவாணர், தமிழ் மண் பதிப்பகம், சென்னை.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| AN INTRODUCTION TO RELIGION AND PHILOSOPHY - TEVARAM AND TIVVIYAPPIRAPANTAM | 200.00 |
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| ம.பொ.சி யின் தமிழ் உணர்வு | 40.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு | 50.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| தமிழ் மொழியின் வரலாறு | 30.00 |
| A BUNCH OF ESSAYS ON TAMIL LITERATURE | 30.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| ON TRANSLATING TIRUKKURAL | 50.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| THIRUVACHAGAM | 175.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| தமிழர் கட்டிடக்கலை | 30.00 |
| THE NARRINAI FOUR HUNDRED | 175.00 |
| பாரதி இந்தியா | 40.00 |
| தமிழில் ஆவணங்கள் | 75.00 |
| தமிழ் மேடை நாடக வரலாறு | 55.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள் | 55.00 |
| மேலை நோக்கில் தமிழ்க்கவிதை | 100.00 |
| SOUND CORRESPONDENCES BETWEEN TAMIL & JAPANESE | 35.00 |
| அயலகத் தமிழ்க்கலை, இலக்கியம், சமகாலச் செல்நெறிகள் | 125.00 |
| TAMIL LITERATURE AND INDIAN PHILOSOPHY | 200.00 |
| சதகத்திரட்டு தொகுதி-1 | 80.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |
| எழுத்திலக்கணக் கோட்பாடு | 70.00 |
| சதகத்திரட்டு தொகுதி-2 | 55.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை-4 | 70.00 |
| சுவடிச்சுடர் | 120.00 |
| தமிழிலக்கியத்தில் ஊனமுற்றோர் | 45.00 |
| தமிழக மகளிரியல் | 80.00 |
| தமிழ் மொழி-இன-இலக்கிய மேம்பாடு மறைமலையடிகளாரின் பங்களிப்பு | 20.00 |
| அறிவியல் தொழில் நுட்பக் கல்வி இன்றைய சந்தைச் சவால்கள் | 25.00 |

**Pub.No.448 பாவாணர் கண்ட இன்றைய தமிழின் இலக்கணங்கள் 30.00**